# விடமாட்டான் விவேக்



## 1



முன்னொரு காலத்தில் தமிழ் வளர்த்த சங்கத்துக்குப் பெயர் போன மதுரையில் ஒரு ஞாயிற்றுக்கிழமை.

நேரம்: மாலை ஐந்து மணி.

இடம்: ஹோட்டல் அசோவிகான் ஏர்கண்டிஷன் கசியும் கான்ப்ரன்ஸ் ஹால். ஹால் ஜனங்களால் நிரம்பியிருக்க - ஏர்கண்டிஷன் காற்று சூடேறிக் கொண்டிருந்தது. ஹாலின் குறுக்கேயும் நெடுக்கேயும் - முக்கோண கலர் தோரணங்கள், துணி பேனர்கள். பேனர்களில் விதவிதமாய் வாசகங்கள்.

**சட்டத்தை காக்கும் கூர்வாளாம்**

**விவேக் அவர்களே! வருக! வருக!**

**மாவீரன் விவேக்கை**
**மதுரை மண் வரவேற்கிறது**
**காவல்துறையின் கலங்கரை விளக்கமே!**
**வருக! வருக!**

ஹால் முழுக்க பத்து தீபாவளிகளின் உற்சாகம். நிமிஷத்திற்கொருதரம் கைத்தட்டல் ஒரு சின்ன பூகம்பமாய் ஹாலை நடுக்கிக் கொண்டிருந்தது. விவேக் மேடையில் - மைக்கை கையில் ஏந்தி நடு நாயகமாய் நின்றிருந்தான். இள நீல வர்ண சபாரி ட்ரஸ். கண்களை இறுக்கமாய் அணைத்த குளிர் கண்ணாடி - மணிக்கட்டில் மின்னும் பொன்னிற ரோலக்ஸ் வாட்ச்.

மேடையின் பின்னணியில் - சிவப்பு வெல்வெட் துணியில் மஞ்சள் பட்டு நூல் 'சிட்டி லைட் ஆர்ட்ஸ் கல்சுரல் அகாடமி' என்னும் எழுத்துக்களை சீராய் எம்பிராய்டரி செய்திருந்தது.

விவேக்கின் கணீர் குரல் மைக்கின் உடம்பில் பட்டு சதுர ஸ்பீக்கர் பெட்டிகளில் எதிரொலித்துக் கொண்டிருந்தது.

''நம் சமூக அமைப்பு ஒரு சமுத்திரம் மாதிரி. சமுத்திரத்தில் அலைகளை தடுத்து நிறுத்துவது எவ்வளவு சிரமமோ... அதைவிட அதிக சிரமம் நம் சமூக அமைப்பில் நிகழும் குற்றங்களைத் தடுத்து நிறுத்துவது... குற்றவாளிகளைக் கண்டு பிடிக்க போலீஸ் துறை எவ்வளவு நவீனமான முயற்சிகளைக் கடைப்பிடித்தாலும் - சில குற்றவாளிகள் தப்பி விடுகிறார்கள். நான் இந்தத் துறையில் ஒரு க்ரைம் ப்ராஞ்ச் ஆபீஸராக பொறுப்பேற்றுக் கொண்ட நாள் முதலாய் - எத்தனையோ வழக்குகளைப் போலீஸ் அதிகாரிகளின் உதவியோடு குற்றவாளிகளைக் கண்டு பிடித்திருக்கிறேன். என்னுடைய மனதில் இருக்கும் ஆசையெல்லாம் இதுதான். குற்றம் செய்யப் போகிறவர்களின் மனதில் என்னுடைய பெயர் உறுத்தலாய் இருக்க வேண்டும். குற்றத்தைச் செய்தால் விட மாட்டான் அந்த

விவேக்! என்கிற ஒரு சின்ன பயம் அவர்களுடைய மனதில் நிரந்தரமாய் இருக்க வேண்டும்...''

ஹாலின் 'ஒரு பூகம்பம்' உண்டான மாதிரி கைத்தட்டல் எழுந்தது. கைத்தட்டல் அடங்கியதும் விவேக் தொடர்ந்தான்.

''சிட்டி லைட் ஆர்ட்ஸ் கல்சுரல் அகாடமியின் சார்பாக எனக்கு அளிக்கப்படும் இந்தப் பாராட்டு - போலீஸ் துறைக்கே அளிக்கப்படும் பாராட்டாக நான் எண்ணுகிறேன். இந்த அள வில் என்னுடைய பேச்சை நிறுதிக் கொண்டு - அகாடமி ஏற் பாடு செய்துள்ள - 'நேர்க்கு நேர்' நிகழ்ச்சியில் உங்கள் கேள்வி களை சந்திக்கவும் - அந்த கேள்விகளுக்கு பதில் சொல்லவும் ஆர்வமாயுள்ளேன். இப்போது கேள்வி நேரம்...''

மறுபடியும் கைத்தட்டல் எழுந்து அடங்கியது.

விவேக் உருண்டை மைக்கோடு - மேடையின் முன்புறம் வந் தான். ஒவ்வொருவராய் எழுந்து கேள்விகளைக் கேட்க ஆரம் பித்தார்கள்.

''விவேக்! எங்கள் ஊரான மதுரையைப் பத்தி என்ன நினைக்கறீங்க?''

''எனக்குப் பிடிச்ச ஊர்கள்ல மதுரையும் ஒண்ணு. வயித் துக்கு வஞ்சனை செய்யாத ஊர். ராத்திரி பனிரெண்டு மணி யானாலும், நாலு வகை சட்னி, மிளகாய் பொடி நல்லெண் ணெயோடு மல்லிகைப்பூ மாதிரி இட்லி எந்த ஊர்ல கிடைக்கும்?''

''உங்க முழுப் பேரென்ன?''

''விவேக்தான்! அப்பா அம்மா வெச்ச பேரே அவ்வளவு தான்.''

''கொலையாளிகளைப் பிடிக்கப் போகும்போது உங்களுக் குப் பயமாய் இருக்காதா?''

''யூனிபார்மை மாட்டும்போதே... பயத்தை கழட்டி வெச்சுடற ஒரே டிபார்ட்மெண்ட்... போலீஸ் டிபார்ட்மெண்ட்தான். அதை யும் மீறி எனக்கு பயமா இருந்தா உங்களுக்கு தகவல் தர்றேன். வாங்க உங்க கையை இறுக்கமா பிடிச்சுகிட்டு போய் - கொலையாளியைப் பிடிக்கிறேன்...''

''விவேக்! ரூபலாவையும் மதுரைக்குக் கூட்டிட்டு வந்திருக் கீங்களா?''

''இதோ! முதல் வரிசையின் என் இல்லாள்'' - விவேக் சொன்ன தும் ரூபலா எழுந்து - கூட்டத்தைப் பார்த்து வணக்கம் சொல்ல - கைத்தட்டல் அடங்க வெகு நேரமாயிற்று.

''க்ரைம் எழுத்தாளர்களில் உங்களுக்கு யாரைப் பிடிக்கும்?''

''வடுவூர் துரைசாமி அய்யங்காரை...''

''பெண் எழுத்தாளர்களில் யாரைப் பிடிக்கும்?''

''வை.மு. கோதை நாயகி அம்மாளை...''

''ஸ்காட்லாண்ட் யார்ட் பாலீஸ் பற்றி உங்களுடைய உண்மையான கணிப்பு என்ன?''

''மெட்ராஸ் போலீஸைக் காட்டிலும் ஒரு பர்செண்ட் புத்தி சாலித்தனமானவர்கள். ஆனால் கம்ப்யூட்டர்களின் அடிமைகள்.''

''உங்களுக்கு பகைவர்கள் இருக்கிறார்களா?''

''பகை எனக்குப் பகை...''

''போன தேர்தலில் நீங்கள் யார்க்கு ஓட்டுப் போட்டீர்கள்?''

''ஓட்டுப் போட பணம் கொடுப்பதும், ஒருவர் யார்க்கு ஓட்டுப் போட்டார்னு தெரிஞ்சுக்க முயற்சி பண்றதும் சட்டப் படி குற்றம்.''

''நீங்கள் போன நாடுகளில் உங்களுக்குப் பிடித்தமான நாடு எதுன்னு சொல்ல முடியுமா?''

''வெளிநாடுகள் சுத்தமாக இருக்கலாம். ஜனங்கள் சிவப்பாக இருக்கலாம். வானளாவிய கட்டிடங்கள் இருக்கலாம். ஆனால் எனக்கு பிடித்தது இந்த அழுக்கான இந்தியா தான். இங்கே - காரில் ஒரு நாய் அடிபட்டால் 'த்ஸொ... த்ஸொ' சொல்லி ஒரு சில விநாடிகளாவது அனுதாபப்படுகிறோம். ஆனால் வெளிநாடுகளில் காரில் ஒரு மனிதன் அடிபட்டால் கூட - ஒரு குப்பையை பார்க்கிற மாதிரி பார்த்துவிட்டுப் போகிறார்கள். மனிதாபிமானம், மனித நேயம் நிரம்பியிருக்கிற இந்தியாவைத்தான் எனக்குப் பிடிக்கிறது...''

கரகோஷம் பிய்த்துக் கொண்டு போயிற்று.

கும்பலின் மத்தியிலிருந்து - கல்லூரி மாணவி மாதிரி தோற்றமளித்த ஒரு பெண் எழுந்து நின்றாள். கரகோஷம் அடங்கியதும் அந்தப் பெண் கேள்வியைக் கேட்டாள்.

''மிஸ்டர் விவேக்! நானும் என் தோழியும் ஒரே ஆணைக் காதலிக்கிறோம். எங்களில் அவர் யார்க்கு சொந்தமானவர்? இதில் இருக்கக்கூடிய ஒரே பிரச்னை அந்த ஆண் நீங்கள் தான்...''

''என் அருமைத் தங்கைகளே! உங்கள் ரூபலா அண்ணி ரொம்பவும் பொல்லாதவள்...''

''நீங்கள் கொலையாளியைக் கண்டு பிடிக்க முடியாமல் திணறிய கேஸ் எது?''

''அப்படியொரு கேஸ் இனிமேல்தான் வர வேண்டும்.''

''பெண்களின் கற்புக்கு பாதுகாப்பு அளிக்க வேண்டிய போலீஸாரே கற்பழிப்பு செய்வதைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்?''

''ஒவ்வொரு துறையிலும் இதயம் இல்லாத சில பேர் இருப்பதுண்டு. போலீஸ் துறையும் அதற்கு விதிவிலக்கில்லை.''

''துபாய் நாட்டுச் சட்டம் நம் இந்தியாவில் அமுலானால் குற்றங்கள் குறையும் என்பது என் கருத்து. உங்கள் கருத் தென்ன?''

''குற்றம் செய்பவர்கள் தண்டனையைப் பார்த்து பயப்படு வதில்லை. நம் நாட்டிற்கு துபாய் சட்டம் வந்தாலும் குற்றங் கள் நடந்து கொண்டுதான் இருக்கும்...''

''நீங்கள் டி.வி. பார்ப்பீர்களா?''

''அந்த குற்றத்தை எப்போதாவது செய்வதுண்டு.''

''இந்நாட்டின் பிரதமர் பதவி உங்களுக்கு ஒரே ஒரு நாள் தரப்படுகிறது? அந்த ஒரு நாளில் நீங்கள் என்ன செய்வீர்கள்...''

''ஒரு நல்ல விலை கிடைத்தால் இந்தியாவை அமெரிக்கா வுக்கு விற்று விடுவேன்... நம் ஊர் அரசியல்வாதிகளையும் சேர்த்துத்தான்...''

ஏறக்குறைய அரைமணி நேரம்!

சீரியஸான கேள்விகளுக்கு சிரத்தையாகவும், கிண்டலான கேள்விகளுக்கு ஜோவியலாகவும் பதில் சொல்லிவிட்டு - மேடையை விட்டு கீழே இறங்கினான் விவேக். நூற்றுக்கணக் கான ஆட்டோகிராப் நோட்டுகள் அவனை நோக்கி எட்டு திசைகளினின்றும் நீண்டன. ஒரு நாற்காலியில் உட்கார்ந்து - மணிக்கட்டு வலியில் கெஞ்ச - ஆட்டோகிராப்பை போட்டு விட்டு - ஹோட்டலினின்றும் வெளியே வந்து காரில் ஏறினான் விவேக். ரூபலாவும் ஏறிக் கொண்டாள்.

கார் தமிழ்நாடு ஹோட்டலை நோக்கிப் புறப்பட்டது. டிரை வர்க்குப் பக்கத்தில் -, உட்கார்ந்திருந்த விழாவின் அமைப் பாளர் ரமேஷ் விவேக்கிடம் சொன்னார். ''ஸார்! உங்களுக்கு பாண்டியன் எக்ஸ்பிரஸ்ஸில் டிக்கட் ரிசர்வ் பண்ணி யிருக்கு...''

''ட்ரெயின் எத்தினி மணிக்கு?''

''எட்டரை மணிக்கு...''

ரூபலா சொன்னாள். ''இன்னும் ஒரு மணி நேரம் இருக்கு. ஹோட்டலுக்குப் போய் - டிபன் சாப்ட்டுட்டு ஸ்டேஷனுக்குப் போக சரியா இருக்கும்...''

பத்து நிமிஷ பயணத்தில் - கார் தமிழ்நாடு ஹோட்டலைத் தொட்டது. விவேக் காரினின்றும் இறங்கி வரவேற்பறைக் குள் நுழைகிறபோதே - ரிசப்ஷன் கௌண்டரில் உட்கார்ந் திருந்த இளைஞன் கூப்பிட்டான்.

''ஸார்... உங்களுக்கு போன்... டி.எஸ்.பி. லைன்ல இருக்கார்...'' விவேக் கௌண்டரை நெருங்கி ரிஸீவரை வாங்கினான்.

''ஹலோ...''

''மிஸ்டர் விவேக்?''

''எஸ்... ஹோல்டிங்...''

''ஃபங்க்ஷன் நடந்த ஹோட்டலுக்கு போன் பண்ணினேன்... இப்பத்தான் நீங்க கார்ல புறப்பட்டுப் போனதா சொன்னாங்க...''

''எனி திங்க் இம்பார்ட்டண்ட்...?''

''எஸ்... மிஸ்டர் விவேக்... அழகர் மலைக்கு மேலே... பழ முதிர்ச்சோலைக்கு போகிற காட்டு வழியில் 'சகதிக்குளம்'ங் கிற பேர்ல ஒரு குளம் இருக்கு. அந்தக் குளத்துல மேல் மட்டம் தண்ணியாவும்... உள்ளே போகப் போக சகதியாவும் இருக் கும்... அதனால அந்த குளத்துப் பக்கம் யாருமே போகாமே இருந்தாங்க. இன்னிக்குக் காலையில வெளியூர் ஆசாமி யாரோ ஒருத்தன் அந்தக் குளத்துல விழுந்து உள்ளே போயிட் டான். அவனோட டெட் பாடியை எடுத்துக்கிறதுக்காக - தீயணைப்பு படையினர் முயற்சி பண்ணும்போதுதான் -

குளத்துக்குள்ளே ஒரு கார் புதையுண்டு போயிருக்கிற விஷயம் தெரிஞ்சது...''

''குளத்துக்குள்ளே காரா?''

''எஸ்...''

''காரை எடுத்துட்டீங்களா?''

''இப்பத்தான் கிரேனை உபயோகிச்சு... வெளியே எடுத்தோம்...''

''என்ன கார்?''

''அம்பாசிடர் மாதிரி தெரியுது... காரோட நிறம் தெரியாத படிக்கு துரு ஏறியிருக்கு... கார் முழுக்க சேரும் சகதியும். அதைக் கிளறிப் பார்த்தப்போ... சின்னச் சின்ன சதை துணுக்குகளோடு... ரெண்டு எலும்புக் கூடுகள்...''

''ஸ்பாட்டுக்கு வர்றேன்...''

ரிஸீவரை வைத்தான் விவேக்.



## 2



**சோ**ழ வந்தான் ரயில்வே ஸ்டேஷனை விட்டு வெளியே வந்தார்கள் துரையரசனும், புனிதாவும். இருவர் கையிலும் இரண்டு பெரிய சூட்கேஸ்கள். கூண்டு வைத்த மாட்டு வண்டிக்கருகே நின்று - மல்லிச்சேரி பீடியை புகையாய் மாற்றிக் கொண்டிருந்த - அந்த முண்டாசுப் பேர்வழி - அவசர அவசரமாய் இரண்டு இழுப்பு இழுத்து - பீடியை எறிந்து விட்டு அவர்களை நோக்கி ஓடோடி வந்தான்.

''அய்யா...''

துரையரசனும் புனிதாவும் நின்றார்கள். ''என்னப்பா?''

''நீங்க மெட்ராஸிலிருந்து தானே வர்றீங்க?''

''ஆமா...''

''உங்க பேரு துரையரசன்... இவங்க பேரு புனிதா...''

''ஆமா...''

''வண்டியில ஏறுங்க. ரமேஷ் அய்யா உங்களை கூட்டி வரச் சொல்லித்தான் என்னைய அனுப்பிச்சு வெச்சிருக் காரு...'' சொல்லிக் கொண்டே துரையரசன் கையிலும் புனிதா கையிலும் இருந்த சூட்கேஸ்களை வாங்கியபடி வண்டியை நோக்கிப் போனான்.

புனிதா துரையரசனை ஏறிட்டுப் பார்த்து சிரித்தாள்.

''என்ன சிரிக்கிறே?''

''உங்க ஃப்ரெண்ட் ரமேஷ் அந்த அழகான புது மாடல் காரை எப்போ வாங்கினார்?''

''ஏய்... கிண்டலடிக்காதே! வண்டிக்காரன் காதுல விழுந்துடப் போவுது...''

''என் காதுல வுளுந்தாச்சுங்கய்யா... அம்மா சொன்னாலும் சொல்லாமே போனாலும் இது புது மாதிரி கார்தான்... ரொம்ப ஸ்ட்ராங்கான கார். எந்த ஜென்மத்திலும் பக்ஞ்சர் ஆகாது. 'ஜல் ஜல்'ன்னு இது ஓடற சத்தமே... ஒரு சங்கீதம் மாதிரிதான். ஒரு கட்டு வைக்கோலுக்கு பத்து கிலோ மீட்டர் போகும். பெட்ரோல் செலவு கிடையவே கிடையாது. ஏதாச்சும் விபத்து ஏற்பட்டாலும் பத்தாயிரம் ரூபாய்க்குள்ளே தான் நஷ்டமாகும்.''

துரையரசன் சிரித்தான்.

''உம் பேரென்னப்பா...?''

''மருத முத்துங்க...''

''நீ சொன்னதுதான் சரி... மருத முத்து... பவுடர் டப்பா மாதிரி இப்ப வர்ற கார்களை விட - கல்லுச் சட்டி மாதிரி இருக்கிற இந்த மாட்டு வண்டி ஆயிரம் மடங்கு மேல். எங்கேயும் ப்ரேக் டவுன் ஆகாத ஒரே வண்டி நம்ம மாட்டு வண்டிதான்...''

மருதமுத்து வாயெல்லாம் பல்லாக - வண்டியின் முன் பக்கமாய் போய் தார்க்குச்சியை உருவிக் கொண்டே சொன்னான்.

''ஏறி உட்கார்ங்கய்யா...''

துரையரசனும் புனிதாவும்... வண்டிக்குள் ஏறி பச்சைப் புல் பரப்பப்பட்ட ஜமுக்காளத்தின் மேல் மெத்தென்று உட்கார்ந்தார்கள்.

''கம்பி போட்டுக்குங்க...''

கம்பி போட்டுக் கொண்டதும் வண்டி கிளம்பியது. காலை நேரக் காற்று சோளப் பயிரின் வாசனையோடு 'கும்'மென்று முகத்தில் மோதியது. மருத முத்து காளைகளை விரட்டிக் கொண்டே சொன்னான். ''ரமேஷ் அய்யா... நேத்து ராத்திரியே என்கிட்டே ஸ்டேஷனுக்கு வண்டிய கட்டிட்டு போகணும்ன்னு சொல்லிட்டாருங்க.''

''ரமேஷ் இப்போ எங்கே? வீட்லதானே?''

''ஆமாங்க... வூட்லதாங்க இருக்காரு... ஸ்டேஷனுக்கு அவரும் வரத்தாங்க இருந்தாரு... அதுக்குள்ள... ஒரு அவசர ஜோலி வந்துடுச்சுங்க...''

''பரவாயில்ல...''

காளை மாடுகள் இப்போது வேகம் கூட்டியிருக்க - செம்மண் பாதையின் இரண்டு பக்கங்களிலும் வாழைத்தோப்புகள் அடர்த்தியாய் ஓடி வந்தது.

புனிதா வியந்தாள்.

''எந்தப் பக்கம் பார்த்தாலும் பச்சைப் பசேலென்று இருக்கே? வருஷம் பூராவும் இப்படித்தான் இருக்குமா?''

''ஆமாங்கம்மா... எந்த ஊருக்கு பஞ்சம் வந்தாலும் சரி இந்த சோழவந்தான் கிராமத்துக்கு பஞ்சமே வராது... ஆடி மழைக்குப் பின்னாடி... ஒரு தடவை நம்ம கிராமத்துக்கு வந்து பாருங்க... நெல்லும் வாழையும் சமைஞ்ச பொண்ணுகளாட் டம் 'செழுசெழு'ன்னு இருக்கும்... நீங்க சோழவந்தான் ரஸ் தாளி பழம் சாப்பிட்டிருக்கீங்களா?''

''ஊ... ஹூ...ம்...''

''பழம் கனிஞ்சுட்டா வாசம் ஊரையே தூக்கும்... பழம் நாக்குல பட்டுட்டா... தேன்தான்...''

''நீ சொல்றதைக் கேட்டாலே பழம் சாப்பிட்ட மாதிரி இருக்கு மருதமுத்து! ஆமா ரமேஷ் வீட்ல உனக்கு என்ன வேலை?''

''வண்டி கட்டிட்டு சந்தைக்கு போற வேலைதாங்க.''

''உனக்கு கல்யாணமாயிடுச்சா?''

மருதமுத்து தார்க்குச்சியால் முதுகை சொறிந்து கொண்டு வெட்கப்பட்டான். ''வ... வந்துங்க... வந்துங்க...''

''அட.... சொல்லு... மருதமுத்து...''

''எ... எனக்கு... ரெண்டு பொஞ்சாதிங்க...''

''போச்சுடா... குழந்தைங்க?''

''நாலு பொண்ணு... மூணு பசங்க...''

''மை குட்னஸ்'' புனிதா உதட்டைக் குவித்தாள்.

''அப்படீன்னா என்னங்க?''

"உன்னோட சேவை நாட்டுக்குத் தேவைன்னு அர்த்தம்..."

"அய்யா..."

"உம்..."

"உங்களுக்கு கண்ணாலமாகி எத்தினி நாளிருக்கும்?"

"எங்களுக்கு கல்யாணம் இனிமேத்தான்..."

"அப்படியா சமாச்சாரம்... நா... உங்களுக்கு கண்ணாலமாகி யிருக்கும்ன்னு நெனைச்சுட்டேன்... ரெண்டு பேரும் காலே ஜூல ஒண்ணா படிச்சவங்களா?"

"ஆமா..."

புனிதா குறுக்கிட்டு கேட்டாள்.

"நாங்க ரெண்டு பேரும் உங்க கிராமத்துக்கு எதுக்காக வந்திருக்கோம் தெரியுமா?"

"ரமேஷ் அய்யா... உங்க கூட படிச்சவரு... அவரைப் பார்க் கத்தானே வந்திருக்கீங்க?"

"இல்ல..."

"பின்னே?"

"உங்க கிராமத்து பெரியவர் சிவசைலத்தை பார்க்க வந் திருக்கோம்."

மருதமுத்து வியப்பாகி விழிகளை விரித்தான்.

"பெரியவர் சிவசைலம் உங்களுக்கு உறவா?"

"ஊ... ஹூ... ம்... அவரை இன்னிக்குத்தான் முதல் முதலாப் பார்க்கப் போறோம். சுபாவத்துல அவர் எப்படி? நல்லவரா?"

"சொக்கத்தங்கம்... அதிர்ந்து பேசத் தெரியாது. காலை யில ஆறு மணிக்கு அவரைப் பார்க்கப் போனா... குளிச்

சுட்டு... தும்பை பூவாட்டம் வேஷ்டியைக் கட்டிகிட்டு... நெத்தி யில விபூதியை பூசிகிட்டு... சிவப்பழமாட்டம் உட்கார்ந் திட்டிருப்பார் பாருங்க... கையெடுத்துக் கும்பிடத் தோணும்... ஆமா அவரை எதுக்காகப் பார்க்கப் போறீங்க...?''

''நாங்க ரெண்டு பேரும்... இந்தப் புராதனக் கோயில்களை ஆராய்ச்சி பண்ற படிப்பை இப்போ படிச்சிட்டிருக்கோம். உங்க ஊர்ல ஒரு வாரம் பத்து நாள் தங்கி - இந்த ஏரியாவில் இருக்கிற கோயில்களைப் பத்தி தெரிஞ்சுக்கிறதுக்காக வந்திருக் கோம். பெரியவர் சிவசைலத்துக்கு இங்கே இருக்கிற எல்லாக் கோயில்களைப் பத்தின வரலாறும் தெரியும்ன்னும் கேள்விப் பட்டோம். அதான் ரமேஷ் மூலமா... அவரைப் பார்த்து பேசி விவரங்களை தெரிஞ்சுக்கிறதுக்காக வந்தோம்...''

''அப்படீங்களா சேதி?''

''உனக்கு இங்கே இருக்கிற கோயில்களைப் பத்தி ஏதா வது விவரம் தெரியுமா மருதமுத்து?''

''எனக்கும் தெரியும்ங்க...''

''சொல்லு பார்க்கலாம்...''

''இந்த ஊருக்கு மேக்காலே பிடாரி அம்மன் கோயில் இருக்குங்க. அதுக்கு கொஞ்சம் தள்ளி பெருமா கோயிலு... கெளக்காலே தென்னந்தோப்புக்கு பின்னாடி சங்கிலி கருப்பன் கோயிலு இருக்கு... அதுக்கப்பாலே... பூ மாரியம்மன் கோயிலு... சொக்கநாதர் கோயிலு... எல்லாமே இருக்கு...''

''அந்த கோயிலெல்லாம் எப்ப கட்டினதுன்னு உனக்குத் தெரியுமா மருதமுத்து?''

''எனக்கெப்படிங்க தெரியும்... அந்த கோயிலெல்லாம் எங்க முப்பாட்டனார் காலத்திலிருந்தே இருக்காமில்ல?''

வண்டி இப்போது - வயல்வெளிகளைக் கடந்து - கிரா மத்துத் தெருக்களில் புழுதி பறக்க ஓடியது. பெண்கள் வீட்டு

வாசல்களை ஈரமாக்கி கோலமிட்டுக் கொண்டிருக்க - கிரா மத்து ஆண்கள் வாயில் வேப்பங்குச்சிகளோடு - திறந்த வெளி டாய்லெட்டுகளை நோக்கி கையில் செம்போடு போய்க் கொண்டிருந்தார்கள். தெரு திருப்பத்தில் இருந்த ஒரு டீக் கடையில் - லுங்கி கட்டிய இரண்டு பேர் - கெட்ட வார்த்தை களோடு சண்டை போட - மற்றவர்கள் கண்ணாடி டம்ளர் களில் இருந்த டீயை உறிஞ்சிக் கொண்டே வேடிக்கை பார்த் தார்கள். வாட்டர் டேங்க்குக்கு கீழே இருந்த குழாயடியில் - நாளைய தாய்மார்களாக உருவாகப் போகும் தாவணி உடுத் திய ப்ளஸ் டூ வயதுப் பெண்கள் பித்தளைக் குடங்களில் நீர் பிடித்துக் கொண்டிருந்தார்கள்.

வண்டி இரண்டு தெருக்களைக் கடந்து - அந்தப் பெரிய வீட்டுக்கு முன்பாய் நின்றது.

துரையரசனும் புனிதாவும் இறங்கினார்கள். உள்ளேயிருந்து ரமேஷ் ஓடி வந்தான். ''வாடா துரை... வா... புனிதா...''

''வர்றோம்... வர்றோம்...''

''ஸாரிடா... ஸ்டேஷனுக்கு வர முடியலை...''

துரையரசன் நிமிர்ந்து ரமேஷைப் பார்த்தான். ''என்னடாது? முடியெல்லாம் கொட்டிப் போய்... தொப்பையை வேற இவ் வளவு பெரிசா வளர்த்து வெச்சிருக்கே? தினமும் எத்தனை பாட்டில் பீர் சாப்பிடறே?''

''பாவி! சத்தம் போடாத... எங்கப்பா வர்றாரு?''

துரையரசனும் புனிதாவும் திரும்பிப் பார்த்தார்கள். அந்தக் காலை நேரத்திலேயே - வாய் நிறைய தாம்பூலச் சாற்றை அடக்கிக் கொண்டு சிவந்த வாயோடும் கூட்டுக்குடுமி, முண்டா பனியன், தட்டு முட்டாய்ச் சுற்றிய வேஷ்டி சகிதம் குண்டாய் ஒரு உருவம் உருண்டு ஸாரி நடந்து வந்து கொண்டிருந்தது.

''எலே... ரமேஷு ஆருடா... அது?''

''மெட்ராஸ்ல என்கூட படிச்சவங்கப்பா... நேத்திக்கு ராத் திரி கூட உங்ககிட்டே சொன்னேனே?''

''ஏதோ கோயில்களைப் பத்தி... ஆராய்ச்சி பண்ணப் போறதா?''

''அவங்களேதான்...''

''ஏன் தம்பி... உங்களுக்கு ஏன் இந்த பொளப்பத்த வேலை? கோயில்களையும் அதுல இருக்கிற... சிலைகளையும் ஆராய்ச்சி பண்றதுனால என்ன பிரயோஜனம்?''

''அப்படி... ஆராய்ச்சி பண்றது... ஒரு படிப்புங்க... கடைசி யில ஒரு பட்டம் குடுப்பாங்க...''

வாயில் நிரம்பியிருந்த தாம்பூல எச்சிலை சர்ரென்று - ரோட்டோர சாக்கடையில் உமிழ்ந்து விட்டு - எரிச்சலாய் சொன்னார். ''ஆமா... பெரிய பட்டம்? அவங்க தர்ற பட்டத்தை வாங்கி வெச்சுக்கிட்டு என்ன பண்ண போறீங்க? உன் கூட படிச்ச எம் பையனும்தான் பட்டத்தை வாங்கியாந்தான். பிரேம் போட்டு சுவத்துல மாட்டினான். அதுக்கப்புறம் இப்போ விவ சாயம் பண்ணைன்னு சுத்திட்டிருக்கான்... பட்டம் வாங்கி என்ன தம்பி பிரயோஜனம்? சரி... சரி... உள்ளாற போங்க... ரயில்ல வந்த அசதி போக குளிச்சிட்டு... பலகாரம் சாப்பிட்டு ரெஸ்ட் எடுங்க... போங்க'' சொன்னவர் -

நகர முயன்ற துரையரசனை நிறுத்தினார்.

''உம்பேரென்ன தம்பி?''

''துரையரசன்...''

''பேர்க்கேத்த மாதிரி... செவப்பா துரை மாதிரியே இருக்கே... அம்மிணி! உம் பேரென்னம்மா?''

''புனிதா...''

''நல்லபேரு! படிப்பு முடிஞ்சதும் ரெண்டு பேரும் கல் யாணம் பண்ணிக்கப் போறீங்களாமே நெசமா?''

''ஆமாங்க...''

''சரி... போய்... குளிங்க...''

''குளிச்சு சாப்பிட்டதும் உடனடியா... நாங்க... ஊர்ப் பெரிய வர் சிவசைலத்தைப் பார்க்கணும்...''

''அதுக்கென்ன... தாராளமா... நீங்களே போய் பார்க்க லாம்... இந்த தெருவுக்கு அடுத்த தெருவுலதான் இருக்கார். ரொம்ப நல்ல மனுசன்... பசு மாதிரி ரொம்ப சாது. எந்த நேரம் போனாலும் வீட்ல இருப்பார்...'' ரமேஷின் அப்பா சொல்லி விட்டு நகர - துரையரசனும், புனிதாவும் வீட்டுக்குள் நுழைந் தார்கள்.

இருவரும் குளித்து - கிராம சூழ்நிலைக்கு ஏற்ற மாதிரி யான ஆடைகளில் நுழைந்து - டிபன் சாப்பிட்டு விட்டு ரமே ஷோடு சிவசைலம் வீட்டை நோக்கிப் புறப்பட்டார்கள்.

''டேய் ரமேஷ்!''

''ம்...''

''உன்னோட கிராமம் கொள்ளை அழகு...''

''எனக்கு இந்த அழகு அலுத்துப் போச்சு...''

''ஒரு கல்யாணத்தைப் பண்ணிக்க வேண்டியதுதானே?''

''இந்த மாசத்துல ஏழெட்டு பொண்ணை பார்த்துட்டேன்... ஒண்ணும் சரிப்பட்டு வரலை...

''நீ சிநேகா மாதிரி பொண்ணு வேணும்ன்னு ஆசைப்பட் டிருப்பே?''

"ச்சீ! போடா... எனக்கு அவ்வளவு பேராசையெல்லாம் கிடையாது... ஏதோ ஒரு த்ரிஷா மாதிரி... இல்லேன்னா.... ஆரம்ப கால ஹேமமாலினி மாதிரி இருந்தாக்கூட போதும்... ஆனா நான் பெண் பார்க்க போற எல்லா இடத்திலும்... பிந்துகோஸ்களும் கொத்தவ்ரங்காய்களும் வந்து நிக்குது..."

புனிதா சிரித்தாள். "ரமேஷ்! நான் ஒரு யோசனையை சொல்லட்டுமா?"

"சொல்லு..."

"ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் மீனாட்சி அம்மன் கோயிலுக்குப் போ... வாசல்ல நின்னுகிட்டு வர்ற போற பெண் களைப் பாரு... ஏதாவது ஒண்ணு பிடிக்காமலா போயிடும்?"

"அப்படியும் நின்னு பார்த்தேனே?"

"என்னாச்சு...?"

"தர்மம் பண்றவனெல்லாம்... என் கையிலேயும் காசு குடுத்துட்டுப் போறான்."

துரையரசனும் புனிதாவும் சிரித்துக் கொண்டிருந்த அதே விநாடி - ரமேஷ் சட்டென்று நின்றான்.

"டேய் துரை..."

"ம்..."

"எதிர்ல வர்றவர்தான் சிவசைலம்..."

துரையரசனும், புனிதாவும் சட்டென்று சிரிப்பை அணைத்து விட்டு - தலைகளை உயர்த்தினார்கள். நல்ல உயரத்தில் - அவர் வந்து கொண்டிருந்தார். அறுபது வயதுக்குரிய தோற்றம். முன் மண்டை வழுக்கையில் சூரியன் மின்னினான். கதர் வேஷ்டி அணிந்து - துண்டால் மார்பையும் முதுகையும் மூடியிருந் தார். நெற்றியில் பளிச்சென்ற விபூதிப் பட்டை. நடுவே கன்னியாகுமரி சூரிய உதயம் மாதிரி குங்குமப் பொட்டு.

ரமேஷ் கும்பிட்டான்.

''அய்யா! வணக்கம்...''

''என்ன ரமேஷு... எங்கே இந்தப் பக்கம்?''

''உங்களைப் பார்க்கத்தான்ய்யா...''

''என்னையப் பார்க்கவா?''

''ஆமாங்கய்யா! இவங்க ரெண்டு பேரும் மெட்ராஸ்ல என் கூடப் படிச்சவங்க... இப்போ ஒரு ஆராய்ச்சி கோர்ஸை எடுத்துப் படிச்சிட்டிருக்காங்க. பழைய கோயில்களையும் அதில் இருக்கிற சிலைகளையும் ஆராய்ச்சி பண்ணி - ஒரு தீஸிஸ் எழுத வேண்டி நம்ம கிராமத்துக்கு வந்திருக்காங்க... நம்ம கிராமத்தைச் சுத்தியிருக்கிற... கோயில்களைப் பற்றி உங்களுக்குத்தான் நல்லா தெரியும்... உங்களுக்குத் தெரிஞ்ச விபரங்களை இவங்களுக்கு சொல்லி உதவணும்...''

ரமேஷ் பேசிக் கொண்டு போக -

சிவசைலத்தின் முகம் கொஞ்சம் கொஞ்சமாய் கோபத்துக்கு போயிற்று.



# 3



அழகர் மலைக்கு மேலே - பழமுதிர்ச் சோலைக்கு போகும் வழியில் - இடறலான - இருட்டான காட்டுப் பாதைக்கு பக்கத்தில் ஜீப் நின்று கொள்ள - விவேக் இறங்கி போலீஸ் அதிகாரிகளோடு டார்ச் வெளிச்சத்தில் - இலைச் சருகுகளை மிதித்தபடி நடந்து - பெட்ரோ மாக்ஸ் விளக்குகள் சூழ்ந்திருந்த குளத்தைத் தொட்டான்.

சுமாரான ஜனக்கும்பல்.

இன்ஸ்பெக்டர் ஒருவர் எதிர்கொண்டு - விவேக்கை குளத்தின் மறுகோடிக்கு கூட்டிக் கொண்டு போனார். காற்றில் ஒரு துர்வாசம் ஒளிந்திருந்தது. எதிர்பாராத விநாடிகளில் மூக்கை சீண்டி இம்சைப் படுத்தியது.

விவேக் கேட்டான்.

''குளத்தில் விழுந்து செத்துப் போன அந்த ஆசாமியோட டெட் பாடியை எடுத்துட்டீங்களா?''

''எடுத்து மார்ச்சுவரிக்கு அனுப்பிட்டோம் ஸார்...''

கட்டி கட்டியான சேற்று அப்பலோடு - நின்றிருந்த கார்க்கு பக்கமாய் வந்தான் விவேக். கான்ஸ்டபிள்கள் பெட்ரோமாக்ஸ் விளக்குகளை உயர்த்திப் பிடிக்க - கார்க்குள் வெளிச்சம் நிரம்பியது.

உள்ளே -

ஸ்டீரியங்கின் மேல் - கவிழ்ந்த நிலையில் ஒரு எலும்புக் கூடும் - காரின் பின் சீட்டில் மல்லாந்த நிலையில் - ஒரு எலும்புக் கூடும் விவேக்கின் பார்வைக்குத் தட்டுப்பட்டது. இரண்டு எலும்புக் கூட்டின் ஜாயிண்ட்களிலும் - கொஞ்சூண்டு கொஞ் சூண்டு சதைத் துணுக்குகள் கார்க்குள் அடைசலாய் சகதி.

''இன்ஸ்பெக்டர்!'' விவேக் மூக்கை விரலால் நிரடிக் கொண்டே கூப்பிட்டான்.

''ஸார்...''

''ரெண்டு ஸ்கெலிடனையும் வெளியே எடுக்கச் சொல் லுங்க...''

''எஸ்... ஸார்...''

இன்ஸ்பெக்டர் கான்ஸ்டபிள்களுக்கு கண்ணைக் காட்ட அவர்கள் - உறைகள் தரித்த கைகளோடு இயங்கினார்கள்.

விவேக் காரைச் சுற்றி வந்தான். இன்ஸ்பெக்டர் பின்னால் வந்தார்.

''கார் அம்பாசிடர் மாதிரி தெரியுது ஸார்...''

''நெம்பர் போர்டு கிடைச்சுதா?''

''இல்ல ஸார்...''

''காரோட டிக்கியைத் திறந்து பார்த்தீங்களா?''

''பார்த்தேன் ஸார்... ஒரு ஸ்டெப்னி டயர் மட்டும் இருந்தது.''

''கார்க்குள்ளே வேற ஏதாவது திங்க்ஸ்?''

''எதுவும் கிடைக்கலை ஸார்...''

''காரோட கலர்... தெரிஞ்சுதா...?''

''கார் முழுக்க ரஸ்ட் ஏறியிருக்கு ஸார்...''

''ஒரு இடத்துல கூடவா பெயிண்டோட நிறம் தெரியலை?''

''காரை முழுக்க கழுவினா... ஒரு வேளை நிறம் பிடிபட லாம் ஸார்...''

''இந்த குளத்தோட ஆழம் எவ்வளவு?''

''இருபதடின்னு சொல்றாங்க ஸார்...? மேலே நாலஞ்சு அடிக்கு மட்டும் தண்ணி தெளிவா இருக்கும் ஸார்... அப் புறம்... உள்ளே போகப் போக கெட்டியான சேறும் சகதியும் தான்... இந்தக் குளத்துல யாரும் இறங்கவோ குளிக்கவோ கூடாதுன்னு ஒரு போர்டு வேற வெச்சிருந்தோம் ஸார்... பத்து நாளா அந்த போர்டையும் காணோம்...''

கான்ஸ்டபிள் பின் பக்கமிருந்து குரல் கொடுத்தார். ''ஸார்! காருக்குள்ளிருந்த ரெண்டு ஸ்கெலிடனையும் வெளியே கொண்டு வந்துட்டோம்...''

விவேக் கீழே கிடத்தப்பட்டிருந்த அந்த எலும்புக் கூடு களுக்கு அருகே வந்து நின்றான். பெட்ரோமாக்ஸ் விளக்கு களை உயர்த்திப் பிடிக்கச் சொல்லிவிட்டு - முழந்தாளிட்டு குனிந்து பார்த்தான்.

நிமிஷ நேர தீவிர பார்வைக்குப் பின் -

அவனுக்கு அந்த வித்தியாசம் தீர்க்கமாய்ப் புரிந்தது.

இரண்டு ஸ்கெலிடனில் ஒன்று பெண்.



# 4



"என்னது... நம்ம கிராமத்து கோயில்களைப் பத்தி ஆராய்ச்சி பண்ண வந்திருக்காங்களா?" - சிவசைலத்தின் குரல் ஆத் திரமாய் வெளிப்பட்டது.

"ஆமாங்கய்யா..." - ரமேஷ் அவருடைய கோபத்தை ஆச்சர்யமாய் ஜீரணித்துக் கொண்டே தலையாட்டினான்.

"தெய்வம் வாழ்கிற அந்த வீடுகளை ஆராய்ச்சி பண்றேன்னு சொல்லிட்டு வர்றது மகா பாவம். தெய்வ உருவங்களை சுரண்டிப் பார்க்கிறதும்... தட்டிப் பார்க்கிறதும் எனக்குப் பிடிக்காத விஷயம்..."

துரையரசன் குறுக்கிட்டான். "அய்யா! இது ஒரு படிப்பு மாதிரி... நாங்க கோயில்களை கேவலப்படுத்த வரலை. அதைப் பத்தித் தெரிஞ்சுக்கத்தான் வந்திருக்கோம். மதுரையைச் சுத்தி இருக்கிற கோயில்களைப் பத்தி - விளக்கமா ஒரு ஆராய்ச்சிக் கட்டுரை எழுதி - யுனிவர்சிடிக்கு கொடுக்கணும்..."

"அதுக்கு வேற எந்த... ஊர்க்காவது போங்க... இங்கே வராதீங்க... அந்தப் பாவ காரியத்துக்கெல்லாம் என்னால உதவ முடியாது... போய்ட்டு வாங்க..."

துரையரசன் கையெடுத்துக் கும்பிட்டான். "அய்யா! இது எங்க படிப்புப் பிரச்னை. எங்களுக்கும் இந்தக் கோயில்களைப் பத்தியெல்லாம் தெரிஞ்சுக்கணும்ங்கிற ஆர்வம் கிடையாது. ஏதோ ஒரு ஆராய்ச்சி பண்ணி - ரிக்கார்டை சப்மிட் பண்ணினா... ஒரு பட்டம் குடுப்பாங்க... அதன் மூலமா இந்து எண்டோவ்மெண்டில் வேலை வாங்கிக்கலாம்... இந்த ஊர்ல உங்களைத் தவிர - வேற யார்க்கும் - இங்கேயிருக்கிற கோயில் களைப் பத்தின விவரங்கள் தெரியாதுன்னு சொன்னாங்க."

"எனக்கு விவரங்கள் தெரியும்ன்னு உங்களுக்கு யார் சொன்னது?"

"எங்க டிபார்ட்மெண்ட்ல இருக்கிற புரபசர்... பேரு... ராஜரத்தினம்... அவரும் மதுரையைச் சேர்ந்தவர்தான்..."

"யார் சொல்லியிருந்தாலும் சரி... இந்த கோயில்களை ஆராய்ச்சி பண்ற வேலைக்கெல்லாம் நான் உதவ மாட்டேன். அது ஒரு தெய்வக் குத்தம் மாதிரி" - சொல்லிவிட்டு வேக மாய் நடக்க ஆரம்பித்தார் சிவசைலம்.

துரையரசன் திகைப்பாய் - ரமேஷைப் பார்த்தான். "என் னடா... என்னமோ நல்லவர்ன்னு சொன்னே... பசு மாதிரி இருப்பார்ன்னு உங்கப்பாவும் சொன்னார். கோயில் ஆராய்ச் சிக்கு உதவும்படியா கேட்டா... இவ்வளவு கோபப்படறார்..."

ரமேஷ் நெற்றியைக் கீறினான்.

"அதாண்டா... எனக்கும் புரியலை... இவர் இவ்வளவு கோபமா பேசி நான் இதுவரைக்கும் பார்த்ததே இல்லை..."

"அப்படீன்னா... இவர்கிட்டே என்னமோ தப்பு இருக் குன்னு அர்த்தம்..."

''தப்பா?''

''ம்... கோபமே வராத ஒரு மனுஷனுக்கு ஒரு விஷயம் கோபத்தை வரவழைக்குதுன்னா... அந்த விஷயத்துல அவர் ஏதோ தப்பு பண்ணியிருக்கார்ன்னு அர்த்தம்...''

ரமேஷ் துரையரசனின் பின்னந்தலையில் தட்டினான். ''பாவி! அவர் இந்த கிராமத்துக்கே காந்தித் தாத்தா மாதிரிடா...''

''ரமேஷ்...''

''ம்...''

''இவர் வீட்ல வேற யார் யாரெல்லாம் இருக்காங்க?''

''சிவசைலத்துக்கு... ஒரேயொரு மகன் மட்டுந்தான்... அவனும் படிச்சு முடிச்சுட்டு திண்டுக்கல்லில் ஏதோ பிசினஸ் பண்ணிட்டிருக்கான்...''

புனிதா குறுக்கிட்டு கேட்டாள். ''சிவசைலத்தை விட்டா... இந்த ஊர்ல வேற யார்க்கும் கோயிலைப் பத்தின விவரங்கள் தெரியாதா?''

''ஊ... ஹூ... ம்...''

''உங்கப்பாவுக்கு...?''

''அவர் அந்தக் காலத்து தி.க. மழைக்குக் கூட கோயில் பக்கமா ஒதுங்க மாட்டார்.''

''அப்படீன்னா... நாங்க இன்னிக்கே மெட்ராஸ் கிளம்ப வேண்டியதுதான். புரபசர்கிட்டே விஷயத்தை சொல்லிட்டு - தஞ்சாவூர் பக்கமா இருக்கிற கோயில்களைப் பத்தி எழுதிட வேண்டியதுதான்...'' - துரையரசன் சொல்ல - புனிதா உஷ்ண மாய் பெருமூச்சு விட்டாள்.



# 5



**கா**ர் கழுவப்பட்டுக் கொண்டிருந்தது.

நேரம் காலை எட்டு மணி. குளத்தின் ஒரு ஓரத்தில் கிடத்தப் பட்டிருந்த ஸ்கெலிடன்களை ஸ்பாட் போஸ்ட் மார்ட்டம் செய்து முடித்த டாக்டரிடம் விவேக் பேசிக் கொண்டிருந் தான். பழமுதிர்சோலைக்கு போய் கொண்டிருந்த கார்களும் பஸ்களும் - நின்று விஷயத்தை தெரிந்து கொண்டதும் வேக மாய் நகர்ந்தன.

டாக்டர் விவேக்கிடம் சொன்னார். ''ஸார் உங்க அஸ்ஸெம் ஷன் கொய்ட் கரெக்ட்... ரெண்டு ஸ்கெலிடன்ல ஒண்ணு பெண். 'பெல்விக் போன்ஸ்' அதை தீர்க்கமா சொல்லுது. இருந் தாலும் ஒரு சந்தேகத்துக்காக... மார்பெலும்புகளில் ஒட்டி யிருக்கிற சதைத் துணுக்குகளை கலெக்ட் பண்ணியிருக்கேன். அதை லேப்புக்கு அனுப்பிப் பார்த்துட்டா... சந்தேகம் தீர்ந் துடும்...''

''ரெண்டு பேர்க்கும் என்ன ஏஜ் இருக்கும் டாக்டர்?''

''எலும்புகளை சோதனைக்கு உட்படுத்தித்தான் சொல்ல முடியும்...''

''எலும்புகளில் ஏதாவது முறிவு இருந்ததா?''

''இல்லை...''

''எனி அப்நார்மலிடீஸ்?''

''நாட் பவுண்ட்...''

இன்ஸ்பெக்டர் குறுக்கே வந்தார். விவேக்கை - ஏறிட்டபடி சொன்னார். ''ஸார் காரை வாஷ் பண்ணிட்டோம்...''

''என்ஜினை ரிமூவ் பண்ணிட்டீங்களா?''

''தனியா எடுத்து வெச்சிருக்கு ஸார்...''

''வாங்க பார்க்கலாம்...''

விவேக் காரை நோக்கிப் போனான். காபி டிகாஷனில் குளிப்பாட்டின மாதிரி காரின் உடம்பு பூராவும் துரு ஏறி யிருந்தது.

''காரோட நிறத்தை கண்டு பிடிக்க முடிஞ்சுதா?''

''ஷெல் ஒயிட்டா இருக்கலாம்ன்னு ஒரு சந்தேகம் ஸார்...''

- காரை நெருங்கினான் விவேக். நான்கு பக்க கதவுகளும் திறந்து வைக்கப்பட்டிருக்க - உள்ளே எட்டிப் பார்த்தான். முன் பக்க சீட்டும், பின் பக்க சீட்டும் ஈரத்தில் சொத சொதத்து - ஸ்பான்ஞ்ச் துண்டங்களை வெளித் தள்ளியிருந்தன. இடுக்குகளில் சேறு இன்னமும் பிடிவாதமாய் இருந்தது. இன்ஸ்பெக்டரை திரும்பிப் பார்த்தான் விவேக்.

''ராத்திரி முழுக்க குளத்தில் தேடியும் நெம்பர் பிளேட் கிடைக்கலை... இல்லையா?''

''ஆமா... ஸார்...''

''சேசீஸ் நெம்பரைப் பார்த்தீங்களா?''

''பார்த்தேன் சார்... நெம்பரைக் கண்டு பிடிக்க முடியலை...''

''அதெப்படி சேசீஸில் நெம்பர் இல்லாமல் போகும்? என்ஜினைப் பார்த்தீங்களா?''

''இனிமேத்தான் ஸார் பார்க்கணும்...''

விவேக் என்ஜினிடம் வந்தான். அதனருகே குனிந்து மெல்லப் புரட்டினான். நெம்பர் என்க்ரே செய்யப்பட்ட இடத்தைத் தேடினான். அது தட்டுப்பட மறுத்தது.

கிட்டத்தட்ட பத்து நிமிஷம்!

விவேக் அதிர்ச்சியோடு நிமிர்ந்தான். நெற்றியிலும் கழுத்திலும் வியர்வை மினுமினுத்தது. "நெம்பரையே காணோமே?"

"கொலையாளி இந்தக் காரை குளத்தில் தள்ளறதுக்கு முந்தி - சேசீஸ் ப்ரேமில் இருந்த நெம்பரையும், என்ஜின் நெம்பரையும் எரேஸ் பண்ணியிருக்கலாம் ஸார்... கார் யாரோடதுன்னு தெரியாமே இருக்கிறதுக்காக... கொலையாளி செஞ்ச முன்னேற்பாடா இருக்கலாம்..."

விவேக் ஒரு பெருமூச்சோடு எழுந்தான்.

"இன்ஸ்பெக்டர்! ஒரு நல்ல கார் மெக்கானிக்கை உடனடியா கூட்டிட்டு இந்தக் காரை பார்க்க வெச்சு... இதனோட ஜாதகத்தை வாங்குங்க... என்னென்ன பர்டிகுலர்ஸ் வேணும்ங்கிறதை சொல்லிடறேன்... டைம் ஆப் பாடி, டைப் ஆப் வெகிக்கிள், நெம்பர் ஆப் சிலிண்டர்ஸ், ஹார்ஸ் பவர், க்யூபிக் கெபாஸிடி, நெம்பர் டிஸ்க்ரிப்ஷன் அண்ட் சைஸ் ஆப் டயர்ஸ் ஆன் ஃப்ரண்ட் ஆக்ஸில் ரியர் ஆக்ஸில் அண்ட் டேன்டம் ஆக்ஸில்..."

"எஸ்... ஸார்..."

விவேக் காரின் டிக்கி போர்ஷனுக்கு வந்தான். எவர் சில்வர் தகட்டாலான பம்பர் மட்டும் துருப்பிடிக்காமல் - கொஞ்சமாய் மின்னியது.

டிக்கியைத் திறந்தான்.

சுத்தமாய் இருந்தது.

டிக்கியை மறுபடியும் மூட முயன்றபோது - பம்பரின் மேல் விவேக்கின் பார்வை கூர்மையாய் படிய - முகம் சின்னதாய் ஒரு மலர்ச்சிக்குப் போயிற்று.



# 6



அந்த இலைப்பச்சை மாருதி கார் சோழவந்தான் கிராமத்துக்குள் நுழைந்து - இருட்டான அதன் தெருக்களில் ஓடி - சிவசைலத்தின் வீட்டுக்கு முன்பாய் வந்து நின்றபோது ராத்திரி பதினோரு மணி கிராமம் முழுக்க அதி உன்னத நிசப்தம்.

போர்டிகோ வெளிச்சத்தில் - நாற்காலியைப் போட்டுக் கொண்டு புத்தகமொன்றை புரட்டிக் கொண்டிருந்த சிவசைலம் எழுந்தார். மாருதியினின்றும் இறங்கிய இளைஞனை நோக்கிப் போனார்.

''வாடா... ராஜன்...''

ராஜன் கவலையாய் கேட்டான். ''என்னப்பா... குளிர் காற்று ஜில்ன்னு அடிச்சுட்டிருக்கு... நீங்க பாட்டுக்கு... உடம்புக்கு ஒண்ணையும் போர்த்துக்காமே... போர்டிகோவில் உட்கார்ந்து படிச்சிட்டிருக்கீங்க...''

சிவசைலம் சிரித்தார்.

''இது வைரம் பாய்ஞ்ச உடம்புடா... இந்த குளிர் காத்தெல்லாம்... என்னை ஒண்ணும் பண்ணாது! ஆமா... இன்னிக்கு ஏன் இவ்வளவு லேட்டு?''

''மில்லுல ஒரு பிரச்னை. திண்டுக்கல்லை விட்டுப் புறப்படும்போதே... பத்து மணியாயிடுச்சு...''

''மில்லுல என்ன பிரச்னை?''

''மெஷினரி லோன் ப்ராப்ளம்தான்... பாங்க் கடன் இருபது லட்சத்தையும்... இன்னும் பதினஞ்சு நாள்ல கட்டச் சொல்லி நோட்டீஸ் வந்திருக்கு... இந்த நேரம் பார்த்து யார்ன்

மார்க்கெட் வேற டல்லு... விலைக்கு வாங்க எந்த பார்ட்டியும் வரலை...''

''அந்த மில்லை வித்து தொலைச்சுடறது தானே?''

''இனிமே அதைத்தான் பண்ணனும்...'' - இருவரும் பேசிக் கொண்டே உள்ளே போனார்கள். ஹாலுக்குள் நுழைந்ததும் கதவைச் சாத்தினார்.

''இன்னிக்கு அமாவாசை நாள்... உனக்கு ஞாபகமிருக்கோ... இல்லையோ... நினைச்சேன்...''

''ஞாபகமில்லாமே எப்படியப்பா போகும்? ஆனா எனக்குத் தான் நீங்க பண்ற பூஜையில நம்பிக்கையே இல்லை...''

''ஏன் அப்படிச் சொல்றே?''

''ரத்தினங்கள் பதித்த அந்த நவபாஷாண விஷ்ணு சிலைக்கு ஒவ்வொரு அமாவாசையன்னிக்கும் ராத்திரி பனிரெண்டு மணிக்கு பூஜை பண்ணினா நம்ம குடும்பத்துக்கு நல்லதுன்னு சொன்னீங்க... நானும் கடந்த அஞ்சு வருஷமா ஒவ்வொரு அமாவாசையன்னிக்கும்... இங்கே வந்து பூஜை யில கலந்துக்கிறேன்... ஆனா... இதுவரைக்கும் என் வாழ்க் கையில நல்லதே நடக்கலையே?''

ஹாலில் இருந்த நான்கைந்து அறைகளைத் தாண்டி - கடைசியாய் இருந்த அறைக்குள் நுழைந்து கொண்டே சிவசைலம் சொன்னார். ''ஏண்டா அப்படி சலிச்சுக்கிறே? தெய்வத்தை நாம யாசிச்சா அது உடனடியா குடுத்துடாது...''

''யோசிச்சுத்தான் குடுக்குமா?''

''காலமறிஞ்சு குடுக்கும்...''

''இன்னும் பதினைஞ்சு நாள்ல நான் பேங்க் லோன் இருபது லட்சத்தைக் கட்டியாகணும். இல்லேன்னா பாங்க் அதாரிடிஸ்

மில்லில் இருக்கிற ட்ராயிங் மெஷின்களையும், சிம்ப்ளெக்ஸ் மெஷின்களையும் - லாரிகளைக் கொண்டாந்து எடுத்துகிட்டுப் போயிடுவாங்க... தெய்வம் எனக்கு உதவி செய்ய வேண்டிய காலம் இது. செய்யுமா அந்த தெய்வம்...?''

''கண்டிப்பா செய்யும்... கவலைப்படாதே...'' - சொன்ன சிவசைலம் அறையின் மூலைக்குப் போய் - அங்கிருந்த அலமாரியின் பக்கத்தில் நின்றார். ராஜன் அலமாரியின் மறுபக்கமாய் நின்றான். இரண்டு பேரும் - அதை சிரமப்பட்டு நகர்த்தி - சுவரின் ஓரமாய் - வைத்துவிட்டு - தரையோடு தரை யாய் சேர்த்துப் பதித்திருந்த - அந்த சதுரமான கடப்பைக் கல்லை சிரமமாய் பெயர்த்து எடுத்தார்கள்.

தரைக்குக் கீழே இருட்டாய் ஒரு பள்ளம் தெரிந்தது.

''ராஜன்...''

''என்னப்பா?''

''அந்த அஞ்சு ஸெல் டார்ச்சை எடுத்துக்க...''

ராஜன் மேஜை மேலிருந்த அந்த பெரிய டார்ச்சை எடுத்துக் கொண்டு வந்தான். பட்டனை அழுத்தி - வெளிச்சத்தை தரைக் குக் கீழே தெரிந்த அந்த இருட்டுப் பள்ளத்தில் கொட்டினான். உள்ளே செங்குத்தாய் மரப்படிகள் தெரிந்தது.

''நீ மொதல்ல இறங்குடா...''

''அப்பா...''

''ம்...''

''பண்ணையாட்கள் யாரையும் இன்னிக்கு வீட்ல தங்க வைக்கலையே?''

''ஊ... ஹூ... ம்... ஒவ்வொரு அமாவாசைக்கும் நான் தான் அவங்களை சினிமா பார்க்க மதுரைக்கு அனுப்பிச் சிடறேனே?''

ராஜன் டார்ச் வெளிச்சத்தோடு - மரப்படிகளில் 'தொம் தொம்' என்று இறங்கினான். அவனைத் தொடர்ந்து சிவ சைலமும் இறங்கினார்.

மணல் பரப்பியிருந்த கீழ் பரப்புக்கு வந்தார்கள். ராஜன் டார்ச் வெளிச்சக் கற்றையோடு முன்னால் நடக்க - சிவ சைலம் தொடர்ந்தார். திடீரென்று ஞாபகம் வந்தவராய் பேச ஆரம்பித்தார். ''ராஜன்! உன்கிட்ட ஒரு விஷயம் சொல் லணும்...''

''என்னப்பா...?''

''ரெண்டு வாரத்துக்கு முந்தி நம்ம கிராமத்துக்கு ஒரு ஆணும் பெண்ணும் வந்திருந்தாங்க... ஏதோ காலேஜில் படிக் கறாங்களாம்... கோயில்களை பத்தியும் அதுல இருக்கிற சிலைகளைப் பத்தியும்... படிக்கிற படிப்பாம்... தமிழ்நாட்டுல இத்தனை கோயில்கள் இருக்கிறப்போ... நம்ம ஊர்க்கு அவங்க ஏன் வரணும்?''

''அப்புறம்?''

''அப்புறம்?''

''நம்ம ஊர் கோயில்களைப் பத்தி ஆராய்ச்சி பண்ணனு மாம்... என்கிட்டயே உதவி கேட்டாங்க... நான் மாட்டேன்னு சொல்லி அனுப்பிச்சுட்டேன்...''

''ஏம்பா அப்படிச் சொன்னீங்க? உதவி பண்ணியிருக்க லாமே?''

''எப்படி உதவி பண்றது? அவன் கோயில் வரலாறுகளை தெரிஞ்சிக்கிறதுக்காக... ஸ்தல புராண புத்தகங்களைக் கேட் பான்... ஓலைச் சுவடிகளைக் கேட்பான்... அதையெல்லாம் படிச்சுப் பார்க்கும்போது... நாம யார்க்கும் தெரியாம எடுத்து வெச்சிருக்கிற... ரத்தினம் பதிச்ச நவபாஷாண விஷ்ணு

சிலையைப் பத்தி அதுல வர்ற விளக்கத்தைப் படிச்சுட்டு... அது எங்கே இருக்குன்னு என்கிட்டே கேட்பான். அதுக்கு நான் ஏதாவது ஒரு பொய்யைச் சொல்லணும். அவன் அந்தப் பொய்யை நம்பாமே... ஹிந்து எண்டோவ்மெண்ட் கமிஷனர்க்கு லெட்டர் எழுதிப் போடுவான்... அவங்க விசாரணைக் கமிஷன் போட்டு என்னையும் உன்னையும் குடைஞ்சு எடுத்துடுவாங்க...''

''அப்புறம் என்னதான் சொல்லி அவங்களை சமாளிச்சீங்கப்பா?''

''கோயில்களையும், அதுல இருக்கிற சிலைகளையும் ஆராயறது தெய்வக் குத்தம். அந்தக் குத்தத்தை நான் பண்ண மாட்டேன்னு சொல்லிட்டேன்.''

''இன்னமும் அவங்க இதே ஊர்லதான் இருக்காங்களா?''

''இல்ல... ரெண்டு நாள் இருந்துட்டு மெட்ராஸ் போயிட்டாங்க. தஞ்சாவூர் பக்கமா இருக்கிற கோயில்களை ஆராய்ச்சி பண்ணப் போயிட்டாங்களாம்...''

''இதை உங்களுக்கு யார் சொன்னா?''

''நம்ம பட்டாமணியம் மகன் ரமேஷ்! ரமேஷ் கூடப் படிச்சவங்களாம் அவங்க...''

சுரங்கப்பாதை முடிந்து போயிருக்க, நின்றார்கள். ராஜன் தன் கையிலிருந்த டார்ச்சை - சுவரின் இடது பக்கமாய் திருப்பினான்.

ஒரு சின்ன அலமாரி - வெளிச்சத்திற்கு கிடைத்தது.

சிவசைலம் இடுப்பிலிருந்த சாவியை - எடுத்து - இரும்பு அலமாரியின் கதவுகளைத் திறந்தார்.

டார்ச் வெளிச்சம் உள்ளே தத்தி ஓட -

ஓரடி உயரத்தில் -

சிவப்பு ரத்தினங்கள் பதித்த -

அந்த நவபாஷாண விஷ்ணு சிலை - மந்தகாசமாய் புன்னகைத்தது. வலது கையின் ஆட்காட்டி விரலில் சக்கரம் ஏந்திய விஷ்ணு.

''மணி என்ன ராஜன்?''

''பதினொன்னு பத்து...''

''சரி! பூஜை சாமான்களை எடுத்து வை...''

''அப்பா! இந்த சிலைக்கு உண்மையாவே சக்தி இருக்குன்னு நீங்க நம்பறீங்களா?''

''நம்பறேன்...''

''எனக்கு சுத்தமா நம்பிக்கையில்லை...''

''பூஜைக்கு வந்துட்டு இப்படியெல்லாம் அச்சாணியமா பேசாதேடா...''

''நான் இன்னிக்கு பூஜைக்காக வரலைப்பா...''

''பின்னே?''

''இந்த சிலையை என் கூடவே எடுத்துட்டுப் போகத்தான் வந்திருக்கேன்.''

''என்னடா உளர்றே?''

''நான் உளறலைப்பா... உண்மையைச் சொல்றேன். இந்த சிலைக்கு பூஜை பண்றதினால ஒரு பிரயோஜனமும் இல்லை... இதை வித்தாத்தான் நமக்கு பிரயோஜனம்...''

சிவசைலம் முகம் சிவந்தார்.

''என்னது... விக்கப் போறியா?''

''ஆமா... 'ஹாரீஸ்'ங்கிற ஒரு ஆஸ்திரேலியக்காரர்க்கு விலை பேசிட்டேன். இந்த விஷ்ணு சிலையைக் கொண்டு போய் - அவன்கிட்டே குடுத்தா... அவன் பதிலுக்கு இருபது கிலோ தங்க பிஸ்கட்ஸ் தர்றதா பேரம்...''

''என்னோட உடம்புல உயிர் இருக்கிற வரைக்கும்... இந்த சிலையை நீ தொட முடியாது...''

''அப்படீன்னா... உங்க உயிரை எடுத்துட்டே... இந்த விஷ்ணு சிலையைக் கொண்டு போறேன்...'' சிரித்துக் கொண்டே சொன்ன ராஜன் - தன் இடுப்பின் மறைவில் ஒளித்து வைத்திருந்த ரிவால்வரை எடுத்தான்.



## 7



விவேக் காரின் எவர்சில்வர் பம்பரை உற்றுப் பார்த்துக் கொண்டே குனிந்தான். இன்ஸ்பெக்டரைக் கூப்பிட்டான். அவர் வேகமாய் வந்து பக்கத்தில் நின்றதும் கேட்டான்.

''இந்த பம்பரில் உங்க பார்வைக்கு ஏதாவது படுதா பாருங்க...''

அவர் உற்றுப் பார்த்து விட்டுச் சொன்னார்.

''ஏதோ லெட்டர்ஸோட இம்ப்ரஷன் தெரியுது சார்...''

''குட்! அது பென்சில் பிரிண்ட் லெட்டர்ஸ்...

சேத்திலும் சகதியிலும் ரொம்ப நாள் இருந்ததினாலே... லெட்டர்ஸ் கொஞ்சம் கண்ணா மூச்சி காட்டுது...''

''முதல் லெட்டர்... 0 மாதிரி தெரியுது ஸார்...''

''அது 0 இல்லை... தமிழெழுத்து 'அ' நல்லாப் பாருங்க...''

''ஆமா... ஸார்...

''அதுக்கு அடுத்தபடியா வர்ற லெட்டர்?''

''சரியா... தெரியலை ஸார்...''

''சரி... மூணாவது... எழுத்து?''

'''பே' ஸார்...''

''கரெக்ட்... அடுத்த எழுத்து பிடிபடுதான்னு பாருங்க...''

''பிடிபடலை... சார்...''

''நெக்ஸ்ட்?''

'''ரா' ஸார்...''

'''ரா' தெளிவாவே தெரியுது... கடைசி எழுத்து என்ன?''

''ஸார்... கடைசி எழுத்துக்கு முன்னாடி - சின்னதா ஒரு வார்த்தை எழுதப்பட்டிருக்கு ஸார்...'' இன்ஸ்பெக்டர் சொல்ல விவேக் உற்றுப் பார்த்தான்.

அந்த வார்த்தை பார்வைக்குத் தட்டுப்பட மறுத்தது. கடைசி எழுத்தும் - கண்ணுக்குப் பிடிபடாமல் போக்கு காட்டியது. விவேக் தன் டயரியை எடுத்து - அந்த எழுத்துக்களை எழுத ஆரம்பித்தான்.

அ - பே - ரா -

காலியான இடங்களில் ஒவ்வொரு எழுத்தையும் பொருத்திப் பார்த்தான். பொருத்தமான வார்த்தை அதில் உட்கார மறுத்தது.

'இந்த வார்த்தை என்னவாக இருக்கும்?'

''ஸார்...''

இன்ஸ்பெக்டரின் குரல் உசுப்பவே நிமிர்ந்தான் விவேக்... குளத்தில் சேறும் சகதியுமாய் மூங்கி எழுந்த கோலத்தோடு -

ஒரு ஆள் நின்றிருக்க - பக்கத்தில் இருந்த இன்ஸ்பெக்டர் சொன்னார்.

''ஸார்... குளத்துக்குள்ளே... இந்த வாட்ச் கிடந்திருக்கு... காரோட நெம்பர் போர்டை தேடிக் கண்டுபிடிக்கிற முயற்சி யில் இந்த வாட்ச் கிடைச்சிருக்கு ஸார்...''

விவேக் வாட்ச்சை வாங்கிப் பார்த்தான்.

அது ஒரு இறக்குமதி கடிகாரம்.

நேரம் 10.37ல் ஸ்தம்பித்துப் போயிருக்க - டே சன்டே என்று சொன்னது. டே 17.... மன்த் ஜூலை... என்று மேலும் தெளிவாய் சொல்லிக் கொண்டே போனது. விவேக் இன்ஸ் பெக்டரை ஏறிட்டான்.

''இந்த வாட்ச்... காரில் இறந்து கிடந்த ஆணுக்கு சொந்த மானதா இருக்கலாம். ஜூலை மாதம் 17-ம் தேதி ஞாயிற் றுக்கிழமை பத்து மணி முப்பத்தேழு நிமிஷத்துக்கு இந்தக் கார் குளத்துக்குள்ளே இறக்கப்பட்டிருக்கலாம். அந்த 10.37 மணி ராத்திரியாகவும் இருக்கலாம். பகலாகவும் இருக்கலாம். நமக்கு கிடைச்சிருக்கிற ரெண்டாவது முக்கியமான தடயம் இது... ஜூலை மாசம் 17-ம் தேதிக்கு... முன்னாலும் பின் னாலும் இருக்கிற ஒரு வார தேதிகளில்... அம்பாசிடர் கார் காணாமே போனதா யார் யார் புகார் குடுத்திருக்காங்களோ... அந்தப் புகாரையெல்லாம்... கலெக்ட் பண்ண வேண்டியது முக்கியம்... காரைப் பத்தி... தெரிஞ்சவங்களுக்கு - பம்பர்ல இருக்கிற வாசகமும் நிச்சயமா தெரிஞ்சிருக்கும்...''

''ஸார்...''

''சொல்லுங்க...''

''இந்த கார்க்கு சொந்தமான ஓனரே... காரை குளத்துக் குள்ளே தள்ளியிருந்தா அந்த நபர் போலீஸ்ல கார் காணாமே போனதா புகார் குடுத்திருக்க மாட்டாரே?''

''அதாவது கொலையாளி அந்த ஓனராவே இருக்கலாம்ன்னு சொல்றீங்க?''

''ஆமா... ஸார்...''

''என்னோட அஸ்ஸெம்ஷனை சொல்லட்டுமா?''

''சொல்லுங்க ஸார்...''

''இது ஒரு திருடப்பட்ட கார்...''



# 8



**சி**வசைலம் உச்ச பட்சமான அதிர்ச்சியோடு - மகன் ராஜனையும் அவன் கையில் இடம் பிடித்திருந்த ரிவால்வரையும் மாறி மாறி பார்த்தார். ராஜன் சத்தமில்லாமல் சிரித்தான்.

''என்னப்பா... பார்க்கறீங்க... ரொம்ப நாளாவே இந்த சிலை மேல எனக்கு ஒரு கண். இதனோட ரூபாய் மதிப்பு உங்களுக்குத் தெரியாததினாலே... இதை சாமியாவே நினைச்சு பூஜை பண்ணிட்டு வந்திருக்கீங்க... என்னைப் பொறுத்த வரைக்கும் இது ஒரு விலை போகிற பொருள்; அதுவும் கோடிக்கணக்கான ரூபாய்க்கு...''

''அடப்பாவி! பணத்துக்காக பெத்த அப்பனையே கொலை பண்ணத் துணிஞ்சுட்டியாடா?''

''நான் கொலை பண்ணப் போறதும்... போகாததும் உங்க கையில்தான் இருக்கு... அந்த நவபாஷாண விஷ்ணு சிலையை எடுத்து... சத்தமில்லாமே என் கையில குடுத்துட்டா... நீங்க இன்னும் கொஞ்ச வருஷம் உயிரோடு இருந்து - மாரடைப் பாலே செத்துப்போய் - என் கையாலே கொள்ளி வாங்கிக் கலாம்... அப்படி இல்லாமே சிலையைக் குடுக்க மறுத்தா...

இதே இடத்துல உங்களை சமாதி பண்ணிட்டுப் போயிடுவேன். என்ன சொல்றீங்க... என் கையால கொள்ளி வாங்கிக்கறீங் களா? இல்லே... தோட்டாவை வாங்கிக்கறீங்களா?''

''என்னடா சொன்னே... அயோக்கிய ராஸ்கல்...''

''நான் அயோக்கிய ராஸ்கல். நீங்க மட்டும் என்னவாம்? யோக்ய சிகாமணியா? நீங்க தர்மகர்த்தாவா இருந்த காலத் துல... பெருமாள் கோயிலுக்கு பின்புறம் இருக்கிற நிலத்துல திருட்டுத்தனமா தோண்டி எடுத்ததுதானே இந்த சிலை? ரத்தினங்கள் பதிச்ச இந்த நவபாஷாண விஷ்ணு சிலை நியா யப்படி.... ஹிந்து அறநிலையத்துறைக்கு போய்ச் சேரணும்... நீங்களே ஏன் வெச்சுகிட்டீங்க?''

''இது தெய்வாம்சம் பொருந்தின சிலைடா... ஒவ்வொரு அமாவாசை அன்னிக்கும் பூஜை பண்ணினா... ரொம்ப நல்ல துன்னு ஏடுல எழுதியிருக்கு...''

''அதெல்லாம் ஹம்பக்! இந்த சிலையை வித்தாதான் நமக்கு நல்லது நடக்கும். நான் விலை பேசிட்டேன். ஹாரீஸ் மதுரை ஹோட்டல்ல தங்க பிஸ்கெட்டுகளோட எனக்காகக் காத்திருக் கான்...'' - சொல்லிக் கொண்டே சிலையை நோக்கிப் போனான் ராஜன்.

சிவசைலம் குபீரென்று அலமாரியை நோக்கிப் பாய்ந்து - அந்த ஓரடி உயர விஷ்ணு சிலையை எடுத்து மார்போடு அணைத்துக் கொண்டார்.

''இந்தச் சிலையை நீ தொட்டே? நாசமாயிடுவே...''

''நான் நாசமாக மாட்டேன்பா... நல்லாயிருப்பேன்... இருபது கிலோ தங்க பிஸ்கெட்ஸ் என் கைக்கு வரப்போகுது...''

''டேய்! இது விலை மதிப்பில்லாத சிலை...''

''எனக்கு இருபது கிலோ தங்கம் போதும்... அதை வெச்சு ஏழெட்டு பிசினஸ் தொடங்கிடுவேன்... குடுங்கப்பா அந்த சிலையை...''

''நான் மாட்டேன்...''

''உங்களைக் கொன்னா கொஞ்சூண்டு பாவம் வருமேன்னு பார்க்கிறேன். பாவம் வந்தாலும் பரவாயில்லைன்னு சுட்டுட வேண்டியதுதான் போலிருக்கு...'' ராஜன் சிவசைலத்தை நோக்கி நகர - அவர் மார்போடு அணைத்த விஷ்ணு சிலையோடு - சுவர் மூலையைத் தஞ்சமடைந்தார்.

''அப்பா! என்னைப் பத்தி உங்களுக்கு நல்லாவே தெரியும். வீம்பு பிடிக்காமே சிலையைக் குடுங்க. உயிரில்லாத அந்த சிலைக்காக நீங்க உயிரை குடுக்க வேண்டாம்...''

''என் உயிரே போனாலும் சரி. சிலையைத் தர மாட்டேன்.''

''அப்படீன்னா நீங்க உயிரை விட்டுட வேண்டியதுதான்...'' ராஜன் ரிவால்வரை உயர்த்தி - சிவசைலத்தின் தலையைக் குறி பார்த்தான். ''அப்பா! என்னை மன்னிச்சுடுங்க... எனக்கு வேற வழி தெரியலை... என் எதிர்கால வாழ்க்கை வெளிச்சமா இருக்கணும்ன்னா... எனக்குப் பணம் வேணும்...''

''டேய்... ராஜன் நான் சொல்றதைக் கேளு... உன்னோட பிசினஸுக்குப் பணம்தானே வேணும்... நான் தர்றேன்... இந்த சிலையைக் கேக்காதே...''

''எனக்குப் பணம் நீங்க தர்றீங்களா?''

''ஆமா...''

''எப்படித் தருவீங்க?''

''இந்த வீட்டை பேங்க்ல அடமானம் வெச்சுத் தர்றேன்...''

''இந்த வீட்டுக்கு பேங்க்காரன் எவ்வளவு தருவான்னு நினைக்கறீங்கப்பா? மீறி மீறிப் போனா... ஏழு லட்சம் தரு வான். அதை வாங்கி என்ன பண்றது?''

''.........''

''சிலையைக் குடுங்கப்பா...''

''மாட்டேன்டா...''

''நீங்க என்னைப் பெத்ததுக்கும், வளர்த்ததுக்கும், படிக்க வெச்சதுக்கும் தனித் தனியா என்னோட நன்றி...'' சொல்லிக் கொண்டே சிவசைலத்தின் தலையை நோக்கி சுட்டான் ராஜன். சைலன்ஸர் பொருத்தப்பட்ட பிஸ்டலிலிருந்து - தோட்டா சீறியது.

சிவசைலம் நெற்றிப் பொட்டில் தோட்டாவை வாங்கிக் கொண்டு - இரண்டு விநாடி ஸ்தம்பித்து - மார்பில் அணைத்த சிலையோடு - ஸ்லோமோஷனில் முன் பக்கமாய் மல்லாந்தார்.



# 9



ரூபலா பொருமினாள். ''மதுரையில் எனக்கு நடக்கிற பாராட்டு விழாவை முடிச்சுகிட்டு அப்படியே மூணாறு தேக்கடி போய் - ஒரு வாரம் ஜாலியா இருந்துட்டு வரலாம்ன்னு சொன்னீங்க... ஆனா மதுரையை விட்டு இன்னமும் நீங்க நகரலை...?''

''நான் என்ன பண்ணட்டும் ரூபி? சுலபமான கேஸா யிருந்தா இங்கேயிருக்கிற க்ரைம் ப்ராஞ்ச்ல ஹேண்ட் ஓவர் பண்ணிட்டு போலாம்னு பார்த்தா. கேஸ் சிக்கலோ சிக்கல்...'' விவேக் சொல்ல - ரூபலா முறைத்தாள்.

''அப்போ தேக்கடி?''

''தேள்கடிதான்...''

''கேஸ் எப்போதான் முடியும்?''

''எப்படியும் பத்து பதினைஞ்சு நாள் இழுத்துடும்...''

''அதுவரைக்கும் மதுரையே கதிதானா?''

''என்ன ரூபி அப்படிச் சொல்லிட்டே? மதுரை போரடிக்காத ஊரு... தினசரி ரெண்டு வேளை குளிச்சிட்டு மீனாட்சி அம்மன் கோயிலுக்கு போலாம். இன்னும் கொஞ்சம் அதிகமா போரடிச்சா. திருப்பரங்குன்றம் போயிட்டு வரலாம். இன்னும் ரொம்ப ரொம்ப... போரடிச்சா... வைகை டேமுக்கு போயிட்டு வரலாம்...''

''என் எரிச்சலைக் கிளப்பாதீங்க...'' - ரூபலா பற்களைக் கடித்துக் கொண்டிருக்கும்போதே - டெலிபோன் கூப்பிட்டது.

விவேக் ரிஸீவரை எடுத்தான்.

''ஹலோ...''

மறுமுனையில் மதுரை எஸ்.பி. பேசினார். ''மிஸ்டர் விவேக்... அந்தக் கார் யாரோடதுன்னு அடையாளம் தெரிஞ்சுதா?''

''நாட் யெட்! ஜூலை மாசம் பதினேழாம் தேதிக்கு முன்னாடியும் பின்னாடியும் காணோமே போன கார்களைப் பத்தின புகார்களை - கலெக்ட் பண்ணச் சொல்லி இன்ஸ்பெக்டர் சுந்தரேசனுக்கு இன்ஸ்ட்ரக்ஷன் குடுத்திருக்கேன். அந்த லிஸ்ட் கைக்கு வந்ததும்தான்... இன்வெஸ்டிகேஷனை தீவிரப் படுத்த முடியும்...''

''அது அம்பாசிடர் கார்தானே?''

''ஆமா...''

''காரோட பம்பர்ல ஏதோ லெட்டர்ஸ் இருந்ததா சுந்தரேசன் சொன்னார். அதை ட்ரேஸ் பண்ணிட்டீங்களா?''

''சில எழுத்துக்கள்.. அதுல.. பிடிபடலை.. மதுரையில் இருக் கிற முக்கியமான கார் ஒர்க்ஷாப்புகளை கான்டாக்ட் பண் ணினா... அந்த வாக்கியம் என்னாங்கிறது பிடிபடலாம்...''

''கேஸை நீங்க ஹேண்டில் பண்றீங்கங்கிற தைரியத்துல தான் பத்திரிகை நிருபர்களுக்கு தெம்பா பேட்டி குடுத்திருக் கேன். இன்னிக்கு மதுரையில் 'டாக் ஆப் தி டவுன்' மேட்டர் இதுதான். கார்ல இருந்த எலும்புக் கூடுகள் யார்? அந்தக் கொலை களுக்கு பின்னணி யார்? எதுக்காக அந்தக் கொலைகள்?''

''கண்டு பிடிச்சுடலாம்... நோ பிராப்ளம்...''

விவேக் ரிஸீவரை வைத்துவிட்டு - ரூபலாவைப்பார்க்க - அவள் கோபம் தணிந்து அருகே வந்தாள். ''போன்ல யாரு?''

''எஸ்.பி...''

''காரோட பம்பர்ல ஏதோ லெட்டர்ஸ் இருந்ததா சொன் னீங்களே? அது என்ன லெட்டர்ஸ்?''

''நீ எனக்கு உதவப் போறியா?'' - விவேக் சிரித்தான்.

''ஏதோ முயற்சி பண்ணிப் பார்க்கிறேன்.. கேஸை சீக்கிரமா ஒரு முடிவுக்கு கொண்டு வந்தாத்தானே.. நாம தேக்கடி போக முடியும்?''

விவேக் தன் சட்டைப் பாக்கெட்டில் இருந்த டயரியை எடுத்தான். ஒரு பக்கத்தைப் பிரித்து அதில் எழுதப்பட்டிருந்த எழுத்துக்களைக் காட்டினான்.

ரூபலா பார்த்தாள்.

அ-பே-ரா-

ரூபலாவை நிமிஷ நேரம் பார்க்க விட்டுப் பின் கேட்டான்.

''என்ன ஏதாவது புரியுதா?''

''இந்த லெட்டர்ஸ் பம்பர்லதானே எழுதப்பட்டிருந்தது?''

''ஆமா...''

''பொதுவா.. காரோட பின் பக்க பம்பர்ல.. வாகனங்களை எச்சரிக்கை பண்ற மாதிரி கார் ஓனர்ஸ் எழுதி வெப்பாங்க.. உதாரணத்துக்கு சவுண்ட் ஹார்ன். ஒலி கொடுத்தால் வழி கிடைக்கும். டோண்ட் கிஸ் மி.''

விவேக் சொன்னான். ''அது மாதிரியான வாசகங்களை நானும் யோசிச்சுப் பார்த்துட்டேன். எதுவுமே பொருந்தி வரலையே?''

''ஒவ்வொரு எழுத்தா.. போட்டுப் பார்த்தீங்களா?''

''சில எழுத்துக்களை மட்டும் போட்டுப் பார்த்தேன்... வார்த்தை கிடைக்கலை.. இங்கே வந்து பார்த்துக்கலாம்ன்னு விட்டுட்டேன்...''

''அ-வுக்கும் 'பே'-வுக்கும் மத்தியில் புள்ளி வெச்ச எழுத்துதான் வரும்ங்கிறது என்னோட யூகம்...''

''சரி.. போட்டுப் பாரு...''

ரூபலா ஒவ்வொரு எழுத்தாய் போட்டு உச்சரித்துப் பார்த்தாள்.

''அக்பே

அச்பே

அட்பே...''

விவேக் கையை சொடுக்கினான். '''ன்'-னைப் போட்டுப் பாரு...''

''அன்பே!''

''காட் இட்...''

ரூபலா விவேக்கை முறைத்தாள். ''கார்க்கும் அன்புக்கும் என்ன சம்பந்தம்?''

''மண்டு! மற்ற எழுத்துக்களையும் செட்டப் பண்ணு.. பொருத்தமா வரி கிடைக்கும்...''

''எப்படி கிடைக்கும்...''

''ஏன் கிடைக்காது? 'டோண்ட் கிஸ் மீ'ன்னு சில கார் ஓனர்ஸ் பம்பர்ல எழுதி வெக்கிற மாதிரி அந்தக்கார் ஓனர் ரசனையா ஒரு வாக்கியம் ஏன் எழுதியிருக்கக் கூடாது?''

''அந்த ரசனையான வார்த்தையை நீங்களே கண்டு பிடிங்க...''

''கண்டு பிடிக்கிறேன்..அதுக்கு முன்னாடி ஒரு கப் டீ வேணும் எனக்கு. கபேடேரியா செக்ஷனுக்கு இண்டர்காமைத் தட்டி ஆர்டர் பண்ணு. டீ வர்றதுக்குள்ளே அந்த ரெண்டவாது வார்த்தையைக் கண்டுபிடிக்கிறேன்.''

ரூபலா இண்டர்காமில் பேசி முடிப்பதற்கும், விவேக்கையைச் சொடுக்குவதற்கும் சரியாக இருந்தது.

''என்ன கண்டு பிடிச்சுட்டீங்களா?''

''சுட்டேன்...''

''என்ன வார்த்தை சொல்லுங்க பார்க்கலாம்?''

''முதல் வார்த்தை 'அன்பே!' அது ஒரு விளிச் சொல் இல்லையா?''

''எனக்கு இலக்கணம்ன்னாலே வேப்பங்காய்...''

''நான் மட்டும் என்ன? தொல்காப்பியர் பரம்பரையா? இந்த விளிச்சொல் இலக்கணம் எலிமெண்டரி ஸ்கூலிலேயே சொல்லித் தர்றது தான்...''

''சரி.. சொல்லுங்க...''

''ஒரு விளிச் சொல் வந்தா அதுக்குப் பின்னாடி வர்ற ஒரு சொல் கட்டளை வார்த்தையாகவோ.. வேண்டுகோள் வாக்கிய மாகவோ வரணும்ங்கிறதுதான் இலக்கணத்தோட விதி. அதன் படி பார்த்தா.. இந்த 'அன்பே'க்கு பின்னாடி வர்ற வார்த்தை ஒரு கட்டளைத்தனம் கலந்த வேண்டுகோள் வார்த்தை.''

''என்ன வார்த்தை?''

''கிடைச்சிருக்கிற 'ரா' எழுத்துக்கு முன்னாடியும் பின் னாடியும் 'வ'வையும், 'தே' வையும் போடு...''

''வராதே!''

''கரெக்ட்! இப்போ ரெண்டு வார்த்தையையும் சேர்த்துப் படி...''

''அன்பே வராதே!''

''இதுக்கு என்ன அர்த்தம்?''

''பின்னால் வர்ற வாகனங்களை எச்சரிக்கை பண்ற வாசகம்...''

''பொருத்தமாப் படலையே?''

''இந்த 'அன்பே'வுக்கும் 'வராதே' வார்த்தைக்கும் மத்தியில் சின்னதா இன்னொரு வார்த்தை இருக்கு. அந்த வார்த்தை பம்பர்ல சுத்தமா பிடிபடலை.. அந்த வார்த்தையும் கிடைச்சா ஒரு பொருத்தமான எச்சரிக்கை வாக்கியம் கிடைக்கும்...''

ரூபலா கண்ணைச் சிமிட்டினாள்.

''அந்த வார்த்தையை நான் கண்டு பிடிச்சுட்டேன்...''

''சொல்லு பார்ப்போம்...''

''அன்பே! அருகில் வராதே...''

''பாப்ரே!'' - விவேக் துள்ளிக் குதித்து - ரூபாவை இறுக்க்கி அணைத்து... ''உனக்கு எங்கே முத்தம் குடுக்கட்டும்?'' என்று சில்மிஷம் செய்தான்.



# 10



**சி**வசைலம் சிக்கனமாய் துடித்து - சீக்கிரமே உயிரை விட்டிருக்க - ராஜன் ரிவால்வரை மறுபடியும் இடுப்புக்கு கொடுத்த படி அவரை நெருங்கினான். கீழே மண்டியிட்டு உட்கார்ந்து - விஷ்ணு சிலையை இறுக்கமாய் பற்றியிருந்த அவருடைய கைகளை விலக்கினான்.

''ஸாரிப்பா! இந்த நிமிஷம் எனக்கு பணம்தான் பெரிசு. உங்க மகன் நல்லாயிருக்கிறதுக்காக உயிர்த் தியாகம் பண்ணியிருக்கீங்க. நீங்க செத்தது யார்க்கும் தெரியப் போறதில்லை. இந்த நிலவறைக்குள்ளேயே உங்களை - அடக்கம் பண்ணிடறேன்...''

விஷ்ணு சிலையை - எடுத்து ஒரு ஓரமாய் வைத்து விட்டு - கடப்பாரையையும் மண்வெட்டியையும் கொண்டு வந்து - பதினைந்து நிமிஷம் செலவழித்து - ஆழமாய் ஒரு குழி வெட்டி - சிவசைலத்தை அந்தக் குழியில் தள்ளி - மண்ணைப் போட்டு - மூடி நிலவறையின் தரைப் பரப்பை பழைய நிலைமைக்கு கொண்டு வந்தான்.

''கவலைப்படாதீங்கப்பா! வருஷா வருஷம் இதே தேதிக்கு வந்து உங்களுக்கு திவசம் பண்றேன்!''

விஷ்ணு சிலையை எடுத்துக்கொண்டு - டார்ச் வெளிச் சத்தின் உதவியோடு - நிலவறைக்குள் நடந்து - மரப்படிகளில் உயர்ந்து - அறையின் மேல் மட்டத்துக்கு வந்தான் ராஜன். கடப்பைக் கல்லை நகர்த்தி - அந்த இருட்டான சதுரத்தை மூடி - அலமாரியை நகர்த்தி வைத்தான். பெருகிய வியர்வையில் உடம்பு பூராவும் மண் ஒட்டி கசகசத்தது.

'முதலில் குளிக்க வேண்டும்!'

'பிறகு இந்தச் சிலையை கார்க்கு கொண்டு போய் சீட்டுக்கு கீழே உருவாக்கியுள்ள மறைவான இடத்தில் வைக்க வேண் டும்!'

'காலையில் மதுரைக்குப் போய் - ஹோட்டல் ஆர்த்தியில் தங்கியிருக்கும் ஹாரீஸைப் பார்த்து - பேரத்தை முடிக்க வேண்டும்!'

யோசித்துக் கொண்டே குளித்து - உடை மாற்றிக் கொண் டவன் விஷ்ணு சிலையை ஒரு ப்ரீப்கேஸுக்குள் வைத்து - வீட்டு போர்டிகோவின் இருட்டில் நின்றிருந்த காரை நோக் கிப் போவதற்காக எழுந்தான்.

''தட்... தட்...''

வாசல் கதவு தட்டப்படும் சத்தம் கேட்டது.

ஒரு விநாடி துணுக்குற்றான் ராஜன்.

'இந்நேரத்திற்கு யார் வந்து கதவைத் தட்டுகிறார்கள்?'

ப்ரீப்கேஸை கட்டிலுக்குக் கீழே தள்ளி விட்டு கதவை நோக்கிப் போனான் ராஜன். சாவி துவாரத்தில் கண்ணை வைத்துப் பார்த்தான்.

இடது கையில் அரிக்கேன் விளக்கோடும் - வலது கையில் நீளமான கம்போடும் யாரோ நின்றிருந்தார்கள்.

ராஜன் குரல் கொடுத்தான்.

''யாரது?''

''அய்யா! நா.. வேலுச்சாமிங்க...''

'வேலுச்சாமி தலையாரி.. அவன் எதற்காக இந்த நேரத் தில்?' குழப்பமாய் யோசித்த ராஜன் கதவைத் திறந்தான்.

''என்ன வேலுச்சாமி?''

''நம்ம பெரிய மிராசு சேர்வை காலமாயிட்டாருங்க! அப் பாரு வீட்ல இல்லீங்களா?''

''அவர் மதுரை போயிருக்காரே?''

''காத்தால வந்துடுவாருங்களா?''

''வந்துடுவாரு..''

''வந்தாக்கா தகவல் சொல்லிடுங்க! சேர்வைக்கும் உங்க அப்பாருக்கும் உயிர் சிநேகிதம். சேர்வை காலமானது தெரிஞ்சா துடிச்சுப் போயிடுவாரு...''

''அப்பா வந்ததும் நான் சொல்லிடறேன்...''

''சரிங்கய்யா..'' - வேலுச்சாமி அசையும் அரிக்கேன் விளக் கோடு - வாசல் கேட்டை நோக்கிப் போனான். அவன் மறை யும் வரை பார்த்துக் கொண்டிருந்து விட்டு கதவைச் சாத்தி தாழிட்டான் ராஜன்.

'அப்பா காலையில்தான் வருவார் என்று வேலுச்சாமி யிடம் சொல்லி விட்டதால் நாளைக் காலை பண்ணையாட்கள் வேலைக்கும் வரும் வரை இங்கே இருந்தே ஆக வேண்டும்...'

சோர்வோடு கட்டிலை நோக்கிப் போனான். விளக்கை அணைத்துவிட்டு - கட்டிலில் உடம்பைக் கிடத்தியபோது - எதிர்ச் சுவரில் பெரிதாய் மாட்டப்பட்டிருந்த அப்பா

சிவசைலத்தின் போட்டோ கண்ணில் பட்டது. போட்டோ வில் புன்னகைத்த சிவசைலத்தின் உதடுகள் ஏதோ பேசுவதற் காக திறந்த மாதிரி அசைய - கண்களை மூடிக்கொண்டு குப்புறப்படுத்தான் ராஜன்.

அதே விநாடி -

ஹாலில் இருந்த கடிகாரம் -

பனிரெண்டு தடவை அதிர ஆரம்பித்தது.

ராஜன் தூங்காமல் வியர்த்துக் கொண்டே நிமிஷங்களைக் கழிக்க ஆரம்பித்தான். கண்களை மூடினால் சிவசைலம் வந்து - அவன் பக்கத்தில் நின்று கொண்டு - புன்னகையோடு அவனையே பார்ப்பது போன்ற ஒரு பிரமை.



# 11



**ம**துரை க்ரைம் பிராஞ்ச் அலுவலகம்.

காலை பத்து மணி. அதிகாரிகளோடு விவேக் சம்பாஷணை யில் இருக்க, இன்ஸ்பெக்டர் சுந்தரேசன் உள்ளே வந்து - விவேக்கிற்கு எதிரே சல்யூட்டோடு நின்றார்.

''எஸ்....''

''ஸார்... பதினேழாம் தேதிக்கு முன்னாலும், பின்னாலும் வர்ற தேதிகளில் கார் காணாமே போனதா எந்த கம்ப் ளைய்ண்ட்டும் இல்ல ஸார். ஆனா பதினேழாம் தேதி ராத்திரி பரவை போலீஸ் ஸ்டேஷன்ல ஒரு அம்பாசிடர் கார் காணாம போனதா ரிப்போர்ட் பதிவாகியிருக்கு...''

''காரைப் பறி கொடுத்த பார்ட்டி யாரு?''

இன்ஸ்பெக்டர் சுந்தரேசன் தன் கையில் வைத்திருந்த விசிட்டிங் கார்டை நீட்ட - விவேக் அதை வாங்கிப் பார்த் தான்.

எம். பாண்டியன், ரூபன் ஆர்ட்ஸ், 52, பால்மால் க்ராஸ் தெரு, மதுரை-1.

''பார்ட்டியைக் கூட்டிட்டு வந்திருக்கீங்களா?''

''வெளியே காத்திட்டிருக்கார் ஸார்...''

''கூப்பிடுங்க...''

சுந்தரேசன் போய் - அந்தப் பாண்டியனைக் கூட்டிக் கொண்டு வந்தார். பாண்டியனுக்கு நடுத்தர வயது. நரை கிராப். வினு சக்ரவர்த்திக்கு தம்பி மாதிரி பெரிய மீசை வைத்துக் கொண்டு - சில்க் ஜிப்பாவிலும், மைனர் செயினிலும் வந்தார். போலீஸ் வாசனை அடிக்கும் ஆட்களைப் பார்த்ததும் லேசாய் மிரண்டார்.

விவேக் அவரை ஏறிட்டான்.

''நீங்கதான் பாண்டியனா?''

''ஆமா ஸார்...''

''உங்க கார் அம்பாசிடரா?''

''ஆமா ஸார்...''

''நெம்பர்...?''

''டி.என்.எம். 6737...''

''கார் எப்போ காணாமே போச்சு?''

''அஞ்சு மாசத்துக்கு முன்னாடி... அதாவது ஜூலை மாசம் 17-ம் தேதி ராத்திரி எட்டரை மணிக்கு.''

''எங்கே வெச்சு காணாமே போச்சு?''

''பரவை நேஷனல் ஹைவேஸ் ரோட்டோரமா நிறுத்திட்டு.. என்னோட தென்னந்தோப்பைப் பார்த்துட்டு வர்றதுக்குள்ளே... காரை எவனோ அடிச்சுட்டுப் போயிட்டான். ஸார்...''

''காரை நீங்க லாக் பண்ணலையா?''

''பண்ணியிருந்தேன் ஸார்.. அப்படியும் கிளப்பிகிட்டு போயிட்டாங்க... உடனே பரவை போலீஸ் ஸ்டேஷன்ல போய் கம்ப்ளைய்ண்ட் குடுத்தேன்...''

''காரோட பின்பக்க பம்பர்ல ஏதாவது வாசகம் எழுதியிருந் தீங்களா?''

''ஆமா ஸார்... அது காலேஜ்ல படிக்கிற என் பையன் எழுதின வாசகம் 'அன்பே அருகில் வராதே'ன்னு எழுதியிருப்பான்...''

''அந்த நேரத்துக்கு எதுக்காகத் தென்னந்தோப்புக்கு போனீங்க?''

''தோப்புல அடிக்கடி தேங்காய் திருட்டு போயிட்டிருந்த தாலே... அதைப் பத்தி விசாரிக்கவும் ஏற்பாடுகள் பண்ணவும்.. காவல்காரனைப் பார்க்கப் போனேன்.''

''அப்போ மணி எத்தனைன்னு சொன்னீங்க?''

''எட்டரை...''

''தோப்புக்குள்ளே போய்ட்டு எத்தனை மணிக்கு திரும்பி வந்தீங்க?''

''எட்டரைக்கு போயிட்டு ஒன்பதுக்குள்ளே திரும்பிட்டேன்...''

''கடந்த அஞ்சு மாச காலமா.. காரைத் தேடி என்னென்ன முயற்சிகளை எடுத்துகிட்டீங்க?''

''போலீஸ்ல புகார் குடுத்ததோட சரிங்க...''

''ஏன்.. முயற்சி எடுக்கலை?''

''போலீஸ் கண்டு பிடித்துக் குடுத்துடுவாங்கன்னு நம்பிகிட்டிருந்தேன்ங்க...''

''உங்க அம்பாசிடர் கார் அழகர்மலைக்கு மேலே இருக்கிற சகதிக் குளத்துல... ஒரு ஆண் பிணம்... மற்றொரு பிணத்தோடு தள்ளப்பட்டிருக்கு.. இதுக்கு என்ன சொல்றீங்க...''

''எனக்கு அதைப் பத்தி ஒண்ணும் தெரியாதுங்க ஸார்... என் காரை யாரோ எடுத்துகிட்டுப் போய்.. அவங்களுக்கு வேண்டாதவங்களை கொலை பண்ணி - கார்ல போட்டுகிட்டுப் போய் குளத்துல தள்ளியிருக்காங்க...''

விவேக் சிரித்துக் கொண்டே நாற்காலியினின்றும் எழுந்தான். ''அப்படி தள்றவங்க எதுக்காக காரில் இருந்த நெம்பர் பிளேட்டையும், சேசீஸ் நெம்பரையும்.. என்ஜின் நம்பரையும்.. அழிக்கணும்?''

''ஸார்...''

பாண்டியன் திடுக்கிட்டுப் பார்க்க - விவேக் தொடர்ந்தான். ''இந்தக் கொலைகளுக்கும்.. உங்களுக்கும் ஏதாவது சம்பந்தம் இருந்தாலோ.. இல்ல.. அதைப் பத்தி உங்களுக்கு ஏதாவது விவரம் தெரிந்தாலோ... இப்பவே மறைக்காமே சொல்லிடறது பெட்டர்... பின்னாடி போலீஸ் கண்டுபிடிச்சா.. நீங்க ரொம்பவும் பாதிக்கப்படுவீங்க...''

பாண்டியன் கையெடுத்து கும்பிட்டார். ''ஸார்! எனக்கு இந்த மதுரைதான் பூர்வீகம்.. ரூபன் ஆர்ட்ஸ்ங்கிற பேர்ல சினிமா பேனர்களை வரையற தொழிலில் ஈடுபட்டு.. ஓரளவு சம்பாதிச்சு வசதியா இருக்கேன். அந்த அம்பாசிடர் காரைக் கூட நான் புதுசா வாங்கலை.. செகண்ட் ஹேண்ட்தான். எனக்கு ஒரு பொண்ணும் பையனும் இருக்காங்க. அவங்க மேல சத்தியமா சொல்றேன் ஸார்.. எனக்கு அந்தக் கொலைகளைப் பத்தி எதுவுமே தெரியாது. செத்தவங்க யார்ன்னும் தெரி

யாது.. இன்னிக்கு காலையில் இன்ஸ்பெக்டர் என் வீட்டுக்கு வந்து விஷயத்தை சொன்னப்பதான்.. விவரமே எனக்குத் தெரியும்...''

''அந்தக் கார் செகண்ட் ஹாண்டா?''

''ஆமா... ஸார்...''

''காரை யார்கிட்டேயிருந்து வாங்கினீங்க.''

''கம்பத்துல 'சி. கண்ணன்'னு ஒருத்தர் இருக்கார். அவர்கிட்ட யிருந்து...

''அந்தக் கண்ணனோட அட்ரஸ் என்ன?''

''நெம்பர் 34, செக்காடித்தெரு, கம்பம்...''

''அவர் கிட்டயிருந்து காரை வாங்கி எத்தினி நாள் இருக்கும்?''

''இரண்டு வருஷமாச்சு ஸார்...''

விவேக் நெற்றியைக் கீறிக் கொண்டு - சில விநாடிகள் யோசித்து - பின் மறுபடியும் பாண்டியனை ஏறிட்டான். ''அப்போ உங்களுக்கு இந்தக்கார் குளத்தில் விழுந்த சங்கதியோ.. அதுல இருந்த பிணங்களைப் பத்தியோ ஒண்ணும் தெரியாது?''

''சத்தியமா தெரியாது ஸார்...''

''சரி! நீங்க போலாம்...''

பாண்டியன் கும்பிடு ஒன்றை போட்டுவிட்டு - வேக வேகமாய் - கர்ச்சீப்பால் வியர்த்த முகத்தை ஒற்றிக் கொண்டு வெளியேறினார்.

விவேக் இன்ஸ்பெக்டரிடம் திரும்பினான்.

''சுந்தரேசன்!''

''ஸார்...''

''பாண்டியனை கொஞ்சம் அப்சர்வ் பண்ணனும்...''

''எஸ்.. ஸார்...''

''அப்புறம்.. அந்த.. சி.கண்ணன்?''

''கம்பத்துக்கு நானே போய் விசாரிச்சுட்டு வந்துடறேன் ஸார்...''

''பாண்டியன் கிட்டே நெருங்கிப் பழகறவங்கள்ல யாரோ ஒருத்தர்தான் இந்தக் காரியத்தை பண்ணியிருக்கணும்ங்கிறது என்னோட அஸ்ஸெம்ஷன். அவரோட காரை ஃபாலோ பண்ணி திட்டமிட்டே கடத்தி - அந்த டெட்பாடிஸை டிஸ் போஸ் பண்ண உபயோகப்படுத்தியிருக்காங்க! இது ஒரு ஊகம்தான்...''

விவேக் பேசிக் கொண்டிருக்கும்போதே -

டெலிபோன் குறுக்கிட்டுக் கத்த - இன்ஸ்பெக்டர் சுந்தரேசன் ரிஸீவரை எடுத்து செவிமடுத்து விட்டு - விவேக்கிடமே நீட் டினார்.

''ஜி.ஹெச்சிலிருந்து சீஃப் டாக்டர் பரமேஸ்வரன் பேசறார் ஸார்...''

விவேக் வாங்கி ''குட்மார்னிங் டாக்டர்'' என்றான்.

''குட்மார்னிங் மிஸ்டர் விவேக்...''

''ஆஸ்டியாலஜி டிபார்ட்மெண்டிலிருந்து ரிப்போர்ட் வந் துடுச்சா டாக்டர்?''

''ரிப்போர்ட் என் கைக்கு வந்ததினால்தான்.. உங்களுக்கு இந்த போன்...''

''ரிப்போர்ட்டில் ஏதாவது வைட்டல் பாயிண்ட்?''

''கிடைச்சிருக்கு...''

''என்ன... டாக்டர்?''

டாக்டர் பரமேஸ்வரன் சொல்ல -

''அட!'' என்று முகம் முழுக்க ஆச்சரியப்பட்டான் விவேக்.



## 12



**கா**லை எட்டு மணி.

ராஜன், விஷ்ணு சிலையை ப்ரீப் கேஸில் அதக்கிக் கொண்டு - போர்டிகோவில் நின்றிருந்த கார்க்கு வந்தான். மாருதி கார் ராத்திரிப் பனியில் உடம்பு முழுக்க வியர்த்திருந்தது. காரின் கதவைத் திறந்து - பின் சீட்டுக்கு கீழே ப்ரீப் கேஸைப் பதுக்கினான். பின் கதவை மூடி டிரைவிங் சீட்டுக்கு வந்தவன் - வீட்டுக்கு பின் பக்கம் வேலை பார்த்துக் கொண்டிருந்த - பண்ணையாட்களில் ஒருவனைக் கூப்பிட்டான்.

''டே... தங்ககனி...''

''அய்யா!'' - தங்ககனி தலையில் கட்டியிருந்த முண்டாசை அவிழ்த்து கக்கத்தில் இடுக்கிக் கொண்டே ஓடி வந்தான். ராஜன் கார்க்குள் நுழைந்து கொண்டே சொன்னான்.

''நான் கிளம்பறேன்...''

''பெரியய்யா.. இன்னும் வல்லீங்களே?''

''வருவாரு.. வருவாரு.. நான் அவசரமா திண்டுக்கல் போகணும். வீட்டைப் பார்த்துக்க...'' சொல்லிக் கொண்டே காரின் இக்னீஷியனை உசுப்பினான் ராஜன்.

தங்ககனி தயக்கமான குரலில் குறுக்கிட்டான்.

''அய்யா...''

''என்ன?''

''பெரியய்யா மதுரைக்கு போயிருக்கிறதா சொன்னீங்க...''

''ஆமா..''

''எதுக்கோசரம் போயிருக்கார்ன்னு சொன்னா பரவாயில் லீங்க...''

''ஏன்.. அது தெரிஞ்சு உனக்கு என்னாகணும்?''

''இன்னிக்கு பண்ணையாளுக்கெல்லாம்.. கூலி குடுக்கிற நாளுங்க.. பெரியய்யா... வர தாமசம் ஆகும்ன்னா சொல்லிட லாங்களே...''

''திருப்பரங்குன்றத்துல யாரையோ பார்க்கணும்ன்னு என்கிட்டே சொல்லிட்டுக் கிளம்பினார். காலையில முதல் பஸ் பிடிச்சு வந்துடறேன்னு சொல்லிட்டுத்தான் போனார். அப் பாவைப் பத்தித்தான் உனக்குத் தெரியுமே தங்ககனி... போனா... போனபடி... வந்தா வந்தபடின்னு...''

தங்க கனி சிரித்தான்... ''சரிங்கய்யா.. நீங்க புறப்படுங்க...''

''வீட்டைப்பார்த்துக்க...'' - சொல்லிக் கொண்டே மாரு தியை உசுப்பினான். நகர்த்தி காம்பௌண்ட் கேட்டை நோக் கிப் போன அதே விநாடி -

எதிரே -

ரமேஷ் - துரையரசன் - புனிதா... மூன்று பேரும் உள்ளே நுழைந்தார்கள். ராஜனுக்கு சிவசைலம் சொன்னது ஞாபகத் துக்கு வந்தது.

'கோயில் ஆராய்ச்சிக்காக வந்த ஒரு ஆணும் ஒரு பெண் ணும்... அவர்கள்தானோ?'

கலக்கத்தை முகத்தில் காட்டிக் கொள்ளாமல் - காரை நகர்த்தி கீழே இறங்கினான் ராஜன். ரமேஷைப் பார்த்து புன்னகைத்தான்.

''என்ன ரமேஷ்? என்ன விஷயம்?''

''அப்பா.. வீட்ல இருக்காரா?''

''இல்லையே... நேத்து ராத்திரி மதுரை போனவர் இன்னும் வரலை.. வர்ற நேரம்தான்.. ஏன் என்ன விஷயம்?''

ரமேஷ் துரையரசனையும்,புனிதாவையும் கைகாட்டினான். ''இவங்க மெட்ராஸிலிருந்து வர்றாங்க.. மிஸ்டர் துரை யரசன்.. மிஸ் புனிதா...''

பரஸ்பரம் 'வணக்கம்' சொல்லிக் கொண்டார்கள். ரமேஷ் தொடர்ந்தான். ''இவங்க தமிழ் பல்கலைக் கழகத்தில் - கோயில்களைப் பத்தின ஆராய்ச்சிப் படிப்பை மேற்கொண்டிருக் காங்க.. அதுக்காக சில கோயில்களையும் - அங்கே இருக்கிற சிலைகளையும் ஆராய்ச்சி பண்ணி.. ஒரு ரிப்போர்ட் தயா ரிக்கணும்... இவங்க நம்ம ஊர் கோயில்களைப் பத்தி தெரிஞ்சுக் கறதுக்காக பத்து நாளைக்கு முன்னாடி வந்தப்ப.. உங்க அப்பா உதவி பண்ண மாட்டேன்னு சொல்லிட்டார்...''

''அப்படியா?''

''அவர் மாட்டேன்னு மறுத்துட்டதாலே இவங்க மறுபடி யும் மெட்ராஸுக்கு போய் - இந்து எண்டோவ்மெண்ட் மூலமா லெட்டர் வாங்கிட்டு வந்திருக்காங்க... இந்த லெட் டர்க்கு அவர் மதிப்பு தரலைன்னா... அது சட்டப்படி குற்றம்...''

ராஜன் புன்னகைத்தான். ''இந்த விஷயத்துக்கெல்லாம் அப்பா ஏன் பிடிவாதம் காட்டணும்?''

''அதுதான் எனக்கும் புரியலை! எல்லார்கிட்டேயும் அன்பாப் பேசறவர்.. இந்த விஷயத்துக்கு மட்டும் ஏன் கோபப்பட் டார்ன்னு தெரியலை...''

''அப்பா.. எந்த நிமிஷமும் வந்துடுவார்.. நீங்க இருந்து பார்த்துட்டுப் போங்க ரமேஷ். நான் திண்டுக்கல்லுக்குக் கிளம்பிட்டிருக்கேன். மில்லில் ஒரு பிராப்ளம்...''

''சரி.. நீங்க கிளம்புங்க... நாங்க இருந்து அப்பாவைப் பார்த்துட்டுப் புறப்படறோம்...''

''அப்பா இந்த லெட்டர்க்கு நிச்சயமா மதிப்பு குடுப்பார். கவலைப்படாதீங்க...'' தலையசைத்து - மாருதிக்குள் புகுந்து - அதை வேகமாய் கிளப்பிக் கொண்டு போனான் ராஜன்.



## 13



**ம**துரை ஜி.ஹெச். ஆஸ்டியாலஜி டிபார்ட்மெண்ட். கண்ணாடி அறைக்குள் விவேக்கும் டாக்டர் பரமேஸ்வரனும் எதிரெதிரே உட்கார்ந்திருந்தார்கள். விவேக் கேட்டுக் கொண் டிருந்தான்.

''டாக்டர்! அந்தப் பொண்ணோட ஸ்கெலிடனில் எந்தக் காலில் ஆறு விரல் இருக்கிறதா சொன்னீங்க?''

''வலது கால்...''

''நான் பார்க்கும் போது.. என்னோட பார்வைக்கு அது தட்டுப்படலையே டாக்டர்?''

''தட்டுப்படாது. காரணம்.. சுண்டு விரலை ஒட்டி வளர்ந்த அந்த சின்ன விரலோட எலும்பு ரொம்பவும் டைனியா இருக் கும். அதுவும் அந்த ஐந்து விரலோடு ஒட்டியிருக்கும். ஆஸ்டி யாலஜிஸ்ட் கண்களுக்கு மட்டுமே கிடைக்கக்கூடிய உண்மை அது...''

''ஓ.கே.டாக்டர்! வாட் அபௌட் அதர் பார்ட்டிகுலர்ஸ்?''

''ஆண் ஸ்கெலிடன் எலும்புகளை வெச்சுப் பார்க்கும் போது - அதற்குச் சொந்தக்காரனான இளைஞனுக்கு - இருபத் தைந்து வயதிலிருந்து முப்பதுக்குள் ஏதோ ஒரு வயது, திடகாத்திரமான உடம்பைப் பெற்றிருக்கலாம்... பெண் ணுக்கு வயது இருபதிலிருந்து இருபத்தைந்துக்குள்... அந்த ஆறாவது விரல் ஒண்ணுதான் அப்நார்மல் சமாச்சாரம்...''

''எலும்புகளில் ஏதாவது முறிவு இருந்ததா டாக்டர்?''

''நோ.. ஒரு சின்னக் கீறல் கூட கிடையாது...''

ரிப்போர்ட்களைக் கையில் எடுத்துக் கொண்டே விவேக் கேட்டான். ''நான் இங்கிருந்து ஒரு போன் பேசிக்கலாமா டாக்டர்?''

''வித் பிளஷர்'' டெலிபோனை நகர்த்தி வைத்தார் டாக்டர். விவேக் ரிஸீவரை எடுத்து டயலைச் சுழற்றி இன்ஸ்பெக்ட ரோடு தொடர்பு கொண்டான்.

''சுந்தரேசன்!''

''ஸார்...?''

''ஜூலை பதினேழாம் தேதிக்குப் பின்னால் - காணாமல் போன - இருபதிலிருந்து முப்பது வயதுக்குட்பட்ட - ஆண் பெண் புகார்களை எல்லா ஸ்டேஷன்களிலிருந்தும் கலெக்ட் பண்ணுங்க.. குறிப்பா ஜூலை பதினேழாம் தேதியிலிருந்து ஆகஸ்ட் முதல் தேதி வரைக்கும் வந்த புகார்களைத் தனியா எடுத்து வையுங்க...''

''எஸ்... ஸார்...''

''தென்.. மெட்ராஸுக்கு ஒரு எஸ்.டி.டி. கால் போட்டு - மிஸ்டர் கோகுல்நாத்தை கான்டாக்ட் பண்ணி - டி.வி.யில் வெளியான காணாமல் போனவர்களைப் பற்றிய அறிவிப்பு களை வாங்கச் சொல்லுங்க.. கலெக்ட் பண்ணின அறிவிப்பு

களோடு மிஸ்டர் கோகுல்நாத்தை உடனடியா மதுரைக்கு புறப்பட்டு வரச் சொல்லுங்க...''

''எஸ்.. ஸார்...''

விவேக் ரிஸீவரை வைத்து விட்டு - டாக்டர்க்கு ஒரு நன்றி சொல்லிவிட்டுக் கிளம்பினான். ஆறாவது விரல் சமாச்சாரம் மனதுக்கு அபாரத் தெம்பைக் கொடுத்திருந்தது.



# 14



**சி**வசைலத்தின் வீடு.

பண்ணையாட்கள் வீட்டுக்கு முன்னால் குழுமியிருக்க, இன்ஸ்பெக்டர் ஒருவர் ராஜனிடம் விசாரித்துக் கொண்டிருந் தார்.

''ராஜன்! உங்க ஃபாதர் காணாமல் போய் இன்றைக்கு சரி யாய் ஒரு வாரமாகப் போகுது. அமாவாசையன்னிக்கு ராத்திரி எத்தனை மணிக்கு அவர் மதுரை புறப்பட்டுப் போனார்?''

''பத்து மணிக்கு...''

''மதுரைக்குப் போறதா சொன்னாரா? இல்லை வேற எங்கேயாவது போறேன்னு சொன்னாரா?''

''என்கிட்டே மதுரை போகப் போறதாகத்தான் சொன்னார்...''

''மதுரையில் அவர் வழக்கமாய் போகிற எல்லா இடங் களிலும் விசாரிச்சுப் பார்த்தாச்சு. ஆள் அங்கே வரலைன்னு சொல்றாங்களே?''

''ஸார்! எனக்கொரு சந்தேகம்...''

''சொல்லுங்க...''

''அப்பாவுக்குக் கொஞ்சம் பிடிவாத குணம் அதிகம். கடந்த ரெண்டு மாச காலமாவே அவர்.. காசிக்குப் போகணும்ன்னு சொல்லிட்டிருந்தார். காசியில் போய் ஒரு மாச காலம் தங்கி - பக்கத்தில் இருக்கிற கோயில்களுக்கெல்லாம் போய் தரிசனம் பண்ண அவர் ரொம்பவும் ஆசைப்பட்டார். நான்தான் போக வேண்டாம்ன்னு சொல்லிட்டிருந்தேன்.''

''ஏன் அப்படிச் சொன்னீங்க?''

''அவர்க்கு ஹை பி.பி. இருந்தது இன்ஸ்பெக்டர். வெய்யில்ல ஒரு நிமிஷம் நின்னாருன்னா மயக்கம் வந்துடும். இவராலே எப்படி காசிக்குப் போய் பத்திரமா திரும்ப முடியும்?''

''அப்படி சொல்லாமே கொள்ளமே காசிக்குப் போவாரா என்ன?''

''போயிருக்காலம்ங்கிறது என்னோட எண்ணம்...''

''காசிக்கு.. போனவர்.. ஒரு வாரமாகியும் தகவல் கொடுக்காமே இருப்பாரா? நீங்களும் பண்ணையாட்களும் கவலைப் படுவீங்கன்னு அவர்க்குத் தெரியாதா?''

ராஜன் வேண்டுமென்றே தலையை இரண்டு கைகளாலும் பற்றிக் கொண்டு - அங்கேயிருந்த நாற்காலியில் உட்கார்ந்தான்.

''என்னால எதையும் கெஸ் பண்ண முடியலை இன்ஸ்பெக்டர். பண்ணையாட்கள் கிட்டே விசாரணை பண்ணிப் பாருங்க. அவங்க சொல்ற தகவல்களிலிருந்து ஏதேனும் விஷயம் தெரியலாம்...''

இன்ஸ்பெக்டர் கும்பலாய் நின்றிருந்த பண்ணையாட்களிடம் திரும்பினார். ''அவர் காணாமே போனது குறிச்சு உங்கள்ல யாராவது ஏதாவது சொல்ல விரும்பறீங்களா?''

கும்பலில் ஒரு அரை நிமிஷ மௌனம்.

இன்ஸ்பெக்டர் மறுபடியும் குரல் கொடுத்தார்.

''உங்க மனசுல எது தோணினாலும் சொல்லலாம்...''

ஒரு ஆள் மார்புக்கு குறுக்காகக் கைகளைக் கட்டிக் கொண்டு முன்னால் வந்தான். ''அய்யா!'' என்று சொல்லிவிட்டு தலையைச் சொறிந்தான்.

''சொல்லு...''

''பெரியய்யா... ரெண்டொரு தரம்... என் காதுபடவே டேய்! பன்னாடைப் பசங்களா! ஒரு நாளைக்கு இல்ல.. ஒரு நாள்.. நா.. சொல்லிக்காமே.. கொள்ளாமே.. காவியைச் சத்தி கிட்டு... கண் காணாமே போயிடறேன் பார்ங்கடா'ன்னு சொல்லியிருக்கார்ங்க...''

ராஜன், பிடி கிடைத்து விட்ட சந்தோஷத்தில் - நிமிர்ந்தான். மனசுக்குள் மகிழ்ச்சியைக்கொண்டாடிக் கொண்டு - குரலில் வருத்தத்தைத் தோய்த்தபடி அவனைக் கூப்பிட்டான்.

''டேய்.. சின்னான் வாடா இங்கே!''

''அய்யா!''

''காவியைச் சுத்திகிட்டு கண்காணாமே போயிடறேன்னு அப்பா சொன்னதை நீ கேட்டியா?''

''ஆமாங்க...''

''எத்தினித் தடவை கேட்டே?''

''ரெண்டு தபாங்க...''

''என்கிட்டே இதை ஏண்டா சொல்லலை...''

''பெரிய அய்யா அதை தமாஷுக்கு சொல்றார்ன்னு நினைச் சுட்டேனுங்க..'' ராஜனின் மனதுக்குள் அவசர அவசரமாய்

ஒரு யோசனை அரும்பியது. அதை உடனே செயல்படுத்தும் விதத்தில் இன்ஸ்பெக்டரிடம் திரும்பினான்.

''ஸார்! ஒரு நிமிஷம் என்கூட வர்றீங்களா?''

''என்ன விஷயம்?''

''உள்ளே வாங்க ஸார்.. சொல்றேன்...'' ராஜன் இன்ஸ்பெக்டரை கூட்டிக் கொண்டு உள்ளே போனான். சொன்னான். ''ஸார்! அந்தப் பண்ணையாள் சொன்ன பிறகுதான் எனக்கு ஒரு விஷயம் ஞாபகத்துக்கு வருது.. ரெண்டு வாரத்துக்கு முந்தி - ஒரு நாள் நான் இங்கே வந்திருந்தப்ப - வேஷ்டி கட்டிக்க ஆசைப்பட்டு - அப்பாவோட பீரோவைத் திறந்தேன். பீரோவோட மேல் தட்டில் ஒரு பிளாஸ்டிக் பைக்குள்ளே... ரெண்டு செட் காவி ட்ரஸ் இருந்தது. யாராவது ஒரு பண்டாரத்துக்குத் தானம் குடுக்கிறதுக்காக அப்பா வாங்கி வெச்சிருக்கலாம்னு நினைச்சேன். கொஞ்ச நேரத்துக்கு முந்தி பண்ணையாள்.. சொன்னதைக் கேட்டதும் எனக்கு அந்த காவி ட்ரஸ் ஞாபகத்துக்கு வந்தது. அப்பாவோட பீரோவை இப்போ திறந்து பார்த்தா உண்மை தெரிஞ்சுடும். பீரோவில் காவி ட்ரஸ் இல்லேன்னா.. அப்பா நிச்சயமா சந்நியாசியாகத் தான் போயிருக்கணும்...''

- சொல்லிக் கொண்டே அப்பாவின் அறைக்குள் நுழைந்து அவருடைய பீரோவைத் திறந்தான். பீரோவின் மேல் தட்டில் நான்கைந்து வெள்ளை வேஷ்டிகள் மட்டும் கண்ணுக்குச் சிக்கியது.

''பார்த்தீங்களா இன்ஸ்பெக்டர்... அந்தக் காவி ட்ரஸ்ஸைக் காணோம்...''

''அவர் சந்நியாசியாப் போயிருப்பார்னு நீங்க உறுதியா நம்பறீங்களா ராஜன்?''

''பண்ணையாள் சொன்னதுக்கும்.. இங்கே காவி செட் ட்ரஸ் இல்லாமே போனதுக்கும் வேற என்ன அர்த்தம்

இன்ஸ்பெக்டர்? அவர் அப்படிப் போக் கூடியவர்தான். அவ ரோட கடவுள் பக்தியைப் பற்றி இந்த ஊருக்கே தெரியும். கொஞ்ச காலம் பெருமாள் கோயில்ல பூசாரியாகவும் இருந் திருக்கார்.''

''மேற்கொண்டு இந்தக் கேஸ்ல என்ன பண்ணலாம்னு நீங்களே சொல்லிடுங்க ராஜன்...''

''எங்கப்பாவை உங்க டிபார்ட்மெண்ட் மூலமா தேடாதீங்க இன்ஸ்பெக்டர். இனிமே அவரைத் தேடிக் கண்டுபிடிக்க வேண் டிய பொறுப்பு என்னோடது. பண்ணையாட்களை ஒவ்வொரு சாமியார் மடத்துக்கும் அனுப்பி அவரைக் கண்டு பிடிக்க வேண்டியது என்னோட வேலை...''

''அப்படீன்னா நீங்க கொடுத்த கம்ப்ளைய்ண்ட்?''

''வாபஸ் வாங்கிக்கறேன்...''

''உங்க ஃபாதரைத் தேட போலீஸ் உதவி வேண்டாமா?''

''வேண்டாம்...''

''இட்ஸ் ஓ.கே...'' - தோள்களைக் குலுக்கி - தொப்பியைச் சரி யாய் பொருத்திக் கொண்டு புன்னகைத்தார் இன்ஸ்பெக்டர்.



## 15



இன்ஸ்பெக்டர் சந்தரேசன் சொல்லிக் கொண்டிருக்க - விவேக் உன்னிப்பாய் கேட்டுக் கொண்டிருந்தான். இடம்: போலீஸ் ஸ்டேஷன்.

''ஸார் கடந்த ஜூலை மாசத்துல மதுரை மாவட்டம் பூரா வும் பதினேழு பெண்கள் காணாமே போயிருக்காங்க. இவங் கள்ல மூணு பேர் தவிர மத்தவங்க எல்லாருமே கிடைச்

சுட்டாங்க... கிடைக்காத மூணு பேர்ல யார்க்கும் வலது காலில் ஆறு விரல்கள் கிடையாது...''

''தரோவா விசாரிச்சுப் பார்த்துட்டீங்களா?''

''பார்த்துட்டேன் ஸார்...''

''திருச்சி டிஸ்ட்ரிக்ட்லிருந்து காணாமே போனவங்க லிஸ்ட்டை வாங்கி செக் பண்ணிப் பார்த்தீங்களா?''

''கேட்டிருக்கேன் ஸார்... கண்ட்ரோல் ரூம் கலெக்ட் பண்ணிட்டிருக்காங்க'' - சுந்தரேசன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே - மேசை மேலிருந்த டெலிபோன் கதறியது.

விவேக் ரிஸீவரை எடுத்துக் காதுக்குக் கொடுத்தான்.

''ஹலோ...''

சென்னையிலிருந்து கோகுல்நாத் பேசினார்.

''விவேக்! நான் கோகுல்நாத்...''

''உங்க போனைத்தான் எதிர்பார்த்திட்டிருக்கேன்...''

''கடந்த அஞ்சு மாசமா காணாமே போனவங்களைப் பத்தின லிஸ்ட்டை டி.வி. ஸ்டேஷனிலிருந்து வாங்கிட்டேன். ஆனா லிஸ்ட்டில் நீங்க எதிர்பார்க்கிற தகவல் இல்லை. காணாமே போனவங்க எல்லாருமே பத்து வயதுக்குட்பட்ட பெண் குழந்தைகள்தான். இருபதிலிருந்து முப்பது வயதுக்குள் ஒரு பெண் மட்டும் காணாமல் போய் - போன மாசம் கிடைச்சுட்டா.''

''கண்ட்ரோல் ரூம் லிஸ்ட்டைப் பார்த்தீங்களா?''

''எக்மோர், பரங்கிமலை ரெண்டும் பார்த்துட்டேன். செங்கல் பட்டு, வேலூர் பார்க்கணும்.. பார்த்துட்டு மறுபடியும் உங்களுக்கு

நான் சாயந்தரம் ஆறு மணிக்கு போன் பண்றேன்.. நீங்க அவெய்லபிளா இருப்பீங்களா?''

''ஹோட்டலுக்கு போன் பண்ணுங்க கோகுல்நாத்...''

கோகுல்நாத் சிரித்தார். ''பாராட்டு விழாவில் கலந்துக்கிற துக்காக மதுரை போன நீங்க.. கேஸ்ல வசமா மாட்டிட்டீங்க போலிருக்கு...''

''கேஸை விட ரூபலா கிட்டே வசமா மாட்டிகிட்டேன். இனிமே நான் எந்த ஊர்க்குக் கூப்பிட்டாலும் வர மாட்டாளாம்...''

''ரூபலாவோட ராசி... எந்த ஊர்க்குப் போனாலும் அங்கே உங்களுக்காக ஒரு கேஸ் கை கட்டி காத்திட்டிருக்கு...''

''இந்த கேஸ் மகா குழப்பம். காரைக் கடத்தினது யாருன்னு தெரியலை. காருக்குள்ளே கிடக்கிற அந்த ரெண்டு எலும்புக் கூட்டுக்கும் சொந்தமானவங்க யார்ன்னு தெரியலை.. கொலை பண்ணினவங்க யார்ன்னும் தெரியலை... எதுக்காக இந்த கொலைகள்ன்னும் தெரியலை... இந்தக் கேஸ்ல இதுவரைக் கும் ரெண்டே ரெண்டு விஷயங்கள் மட்டும் தெளிவா கிடைச் சிருக்கு. ஒண்ணு கார்க்கு ஓனர் ரூபன் ஆர்ட்ஸ் பாண்டியன். இன்னொண்ணு எலும்புக்கூட்டுக்குச் சொந்தமான அந்தப் பொண்ணுக்கு வலது கால்ல ஆறு விரல்...''

''கேஸ் ஒரு மாசத்துக்கு இழுத்துடும் போலிருக்கே?''

''ரூபலாகிட்டே... இப்படி.. சொல்லிடாதீங்க... பெரும் எரிமலையாகி கொந்தளிச்சுப் போயிடுவா... எனக்கு அஞ்சு நாள் டயம் குடுத்திருக்கா.. அதுக்குள்ள நான் கேஸை அவிழ்த் தாகணும்...''

''முடியும்ன்னு எனக்குத் தோணலை...'' - கோகுல்நாத் மறுமுனையில் சிரித்தார்.. பலமாய்.



# 16



**ரா**ஜன் தன் மாருதி காரை ஆர்த்தி ஹோட்டலுக்குள் நுழைத்து - கார் பார்க்கிங்கில் நிறுத்தியபோது நேரம் இரவு எட்டு மணி. காரின் பின் சீட்டுக்குக் கீழே மறைத்து வைத் திருந்த ப்ரீப்கேஸை எடுத்துக் கொண்டு கீழே இறங்கினான்.

ஊரை விட்டு தள்ளியிருந்த அந்த ஃபைவ் ஸ்டார் ஹோட் டல் அந்த ராத்திரி எட்டு மணிக்கே அடங்கிப் போயிருந்தது. நிசப்தமாயிருந்த வரவேற்பறைக்குள் நுழைந்து - கௌண் டரை நெருங்கினான் ராஜன். தோல் சீவிய வெள்ளரிக்காய் நிறத்தில் வெளுப்பாய் இருந்த அந்த ரிசப்ஷனிஸ்ட் பெண் நிமிர்ந்தாள்.

''எஸ்...''

''மிஸ்டர் ஹாரீஸ் ஃப்ரம் ஆஸ்ட்ரேலியா...''

''ரூம் நெம்பர் ட்டூ.. த்ரீ... ஃபைவ்...''

''தேங்க்யூ...'' - ராஜன் அங்கிருந்து நகர்ந்து - காலியாய் இருந்த லிப்ஃட்டை உபயோகப்படுத்தி - இரண்டாவது மாடிக்கு வந்து - வராந்தாவில் நடந்து 235ம் எண்ணிட்ட அறைக்கு முன்பாய் வந்து நின்றான். பஸ்ஸரை உபயோகிக்காமல் - ஆட்காட்டிவிரலை கொக்கி மாதிரி மடக்கி - தட்டினான்.

''டொக்.. டொக்...''

சில விநாடிகள் நிசப்தம்.. பிறகு -

கதவு மெல்லத் திறந்தது.

திறந்த கதவுக்குப் பின்னால் - ஹாரீஸ் நின்றிருந்தார். நடுத்தர வயது. குங்கும நிறம். செம்பட்டை கிராப்.

மீசையிலும், புருவ ரோமங்களிலும் அதே செம்பட்டை நிறம்.ரோஸ் நிற உதடுகளைப் புன்னகையில் விரித்த போது - உள்ளே ஒழுங்கான மஞ்சள் பல் வரிசை தெரிந்தது.

''ஹலோ.. ராஜன்.. வெல்கம்...'' - ஹாரீஸ் ராஜனின் பெயரைத் தப்பாக உச்சரித்து.. அவனுடைய கையைப் பற்றிக் குலுக்கினார். ராஜன் ஆங்கிலத்தில் வாயைத் திறந்தான். ''ஸாரி மிஸ்டர் ஹாரீஸ்... நான்கு நாட்களுக்கு முன்பே உங் களைச் சந்திக்க இருந்தேன். ஆனால் வீட்டில் ஒரு பிரச்சனை. அதனால் உங்களை வந்து சந்திக்க முடியவில்லை.''

''நோ.. ப்ராப்ளம்.. நான் நாளை கழித்து மறுநாள்தானே என் நாட்டுக்குப் போகப்போறேன்'' - கதவைச் சாத்தித் தாழிட்டு விட்டு ராஜனின் தோளில் கை போட்டு சோபா வுக்குக் கூட்டி வந்தார் ஹாரீஸ்.

இருவரும் உட்கார்ந்தார்கள்.

''எனி ஹாட் ட்ரிங்க்ஸ்?''

''நோ..''

''பீர்?''

''நோ...''

''தென் கூல் ட்ரிங்க்ஸ்?''

''வேண்டாம் மிஸ்டர் ஹாரீஸ். நான் சீக்கிரமே திண்டுக்கல் பறப்பட்டுப் போக வேண்டும். பிசினஸை முடித்துக் கொள் வோம்...''

''சிலையைக் கொண்டு வந்திருக்கிறீர்களா?''

''அது இல்லாமல் இங்கே வருவேனா...'' - சொன்ன ராஜன் ப்ரீப்கேஸை டீபாயின் மேல் கிடத்தி - அதன் லாக்கர்களை விடுவித்து - பாலிதீன் தாளில் சுற்றப்பட்ட நவபாஷான விஷ்ணு சிலையை எடுத்து - ஹாரீஸிடம் நீட்டினான்.

ஹாரீஸின் கோபால்ட் நிற கண்கள் வியப்பில் விரிந்தது. "உங்களுடைய அப்பா இந்த சிலையைக் கொடுக்க எப்படி ஒப்புக் கொண்டார்?"

"அதைப் பற்றிய கவலை உங்களுக்கு வேண்டாம் ஹாரீஸ்.. உங்களிடம் நான் ஏற்கனவே பேசினபடி சிலையைக் கொண்டு வந்துவிட்டேன். நீங்கள் சிலையை எடுத்துக் கொண்டு - சொன்னபடி கோல்ட் பிஸ்கெட்ஸ் கொடுத்துவிடுங்கள்."

ஹாரீஸ் சிலையை - ஒரு குழந்தை மாதிரி பாவித்து - மடியில் வைத்துக் கொண்டு ரசித்தார். "வாட்... ஏ.. ப்யூட்டி ஃபுல் ஸ்டாச்யூ?"

"சிலையை நீங்கள் ராத்திரி பூராவும் ரசிக்கலாம்... ஹாரீஸ்! இதனுடைய மதிப்பு.. நீங்கள் எனக்குக் கொடுக்கப் போகிற இருபது கிலோ தங்கத்தைக் காட்டிலும் அதிகம்..."

ஹாரீஸ் தலையாட்டிக் கொண்டே போய் - கட்டிலுக்குக் கீழே மறைவாய் வைத்திருந்த ஒரு ப்ரீப்கேஸோடு வந்தார். ராஜனிடம் நீட்டினார்.

"ஒரு பிஸ்கெட் 250கிராம் எடை. மொத்தம் எண்பது பிஸ்கெட்டுகள் இருக்கின்றன. சரி பார்த்துக் கொள்ளுங்கள் ராஜன்."

ஹாரீஸ் சொல்லிக் கொண்டே ப்ரீப்கேஸை நீட்ட - அதைக் கனமாய் வாங்கி - டீபாயின் மேல் வைத்துத் திறந்தான் ராஜன்.

பளீரென்ற அடர்த்தியான மஞ்சளில் தங்க பிஸ்கெட்கள் இரண்டு வரிசையாய் அணிவகுத்திருந்தது. ஒரு கட்டியைக் கையிலெடுத்துப் பார்த்தான். 'ஆஸ்-கோல்ட் சிட்னி' என்ற எழுத்துக்கள் என்க்ரேவ் செய்யப்பட்டிருந்தது.

ராஜன் எழுந்து கொண்டான். "தாங்க்யூ மிஸ்டர் ஹாரீஸ்! பிசினஸ் முடிந்து விட்டது. எந்தக் காரணத்தை முன்னிட்

டாவது நீங்களே நானோ போலீஸில் பிடிபட நேர்ந்தால் - ஒருத்தரையொருத்தர் காட்டிக் கொடுக்கக் கூடாது...''

''இது ஏற்கனவே பேசிய விஷயமாயிற்றே? ஞாபகத்தில் இருக்கிறது. என்னை எந்தப் போலீஸும், கஸ்டம்ஸும் மடக்க முடியாது.. அப்படி மடக்கினாலும் என் கைவசம் மீதியிருக் கும் தங்க பிஸ்கெட்டுகள் அவர்களை மடக்கி விடும். லஞ்சம் என்பது எல்லா நாட்டிலும் ஊறிப்போன ஒரு விஷயம் அல்லவா?

ராஜன் சிரித்துக் கொண்டே - ப்ரீப்கேஸின் லாக்கர்களை அழுத்தி - பூட்டிக்கொண்டு கையில் எடுத்துக் கொண்டான்.

''நாளைக் கழித்து மறுநாள் சிட்னி புறப்பட்டு போய் விடுவீர்கள்.. இல்லையா?''

''கண்டிப்பாய்...''

''நீங்கள் அடுத்த முறை இந்தியா வரும்போது - நண்பர் களாக சந்திப்போம். குட்பை... விஷ்.. யூ.. ஆல்.. த.. பெஸ்ட்...'' - ராஜன் ஹாரீஸின் கையைப் பற்றி குலுக்கி விட்டு - அறையினின்றும் வெளியே போனான்.

புன்னகையோடு அவனை வழியனுப்பிவிட்டு உள்ளே வந்த ஹாரீஸ் - விஷ்ணு சிலையை எடுத்து - கட்டிலுக்கு கீழே இருந்த பெரிய சூட்கேஸில் பத்திரப்படுத்தினார். அறைக் கதவு சரியாய் தாழிடப்பட்டிருக்கிறதா என்று ஒரு முறை பார்த்துக் கொண்டு - சூட்கேஸின் ஓரத்திலிருந்த - ட்ரான் சிஸ்டர் மாதிரி இருந்த வயர்லெஸ் கருவியை எடுத்து உசுப் பினார்.

''ஹலோ...''

''.......''

''பிசினஸ் ஓவர்... கெட்டியாய் தங்கப்பூச்சு பூசப்பட்ட இரும்புத் துண்டுகள் 'தங்க பிஸ்கெட்ஸ்' என்ற பெயரில் இப்போது அவன் கையில். அவனுக்கு அந்த உண்மை தெரியும் முன் கொல்லப்படுவது அவசியம்...''

''..........''

''முடித்து விடுங்கள். இலைப் பச்சை நிற மாருதி கார். நெம்பர் டி.எம்.டி. 608.''

''..........''

''ஆளைத் தீர்ப்பதில் ஜாக்கிரதை வேண்டும்...'' - சொல்லி விட்டு வயர்லெஸ்ஸை அணைத்தார். பின் ஒரு சந்தோஷப் புன்னகையோடு எழுந்து - சுவர் அலமாரியில் வைத்திருந்த ஸ்காட்ச் பாட்டிலை நோக்கி - ஒரு துள்ளல் நடையோடு போனார்.



## 17



**கோ**குல்நாத் சென்னையிலிருந்து மதுரைக்குத் திரும்பியிருந்தார். ஹோட்டல் அறையில் ரூபலா - விவேக்கிற்கு எதிரே உட்கார்ந்து நிதானமான குரலில் சொல்லிக் கொண்டிருந்தார். ''கடந்த ஒரு வார காலமா.. தமிழ்நாடு பூராவும் இருக்கிற ஹெட்குவார்ட்டர்ஸிலிருந்து காணாமே போனவங்க லிஸ்ட்டை வாங்கி அலசிப் பார்த்தாச்சு... ஸ்பெஷல் ஐடென்டிஃபிகேஷன் 'காலத்தில்' -எந்தப் பெண்ணுக்குமே இந்த ஆறு விரல் சமாச்சாரம் கிடையாது...''

விவேக் குறுக்கிட்டான்.

''தமிழ்நாடு பூராவும் அந்த ஜூலை மாசம் எவ்வளவு பெண்கள் காணாமே போனதா கம்ப்ளைய்ண்ட்ஸ் வந்திருக்கு கோகுல்நாத்?''

''நீங்க பர்ட்டிகுலரா கேக்கிற ஏஜ் க்ரூப்பில் மட்டும் முப் பத்தேழு பேர்...''

''இந்த முப்பத்தேழு பேரும் இன்னும் கண்டு பிடிக்கப் படலை...?''

''ஆமா...''

''அந்தந்த ஏரியா போலீஸ் பீட் மூலமா விசாரிக்கச் சொன் னீங்களா கோகுல்நாத்?''

''விசாரிக்கச் சொன்னேன். பட்... நமக்குச் சாதகமான பதில் கிடைக்கலை.. எல்லார்க்குமே வலது கால்ல அஞ்சு விரல் தானாம்...''

ரூபலா குறுக்கிட்டாள்.

''அங்கிள் என்னோட அஸ்ஸெம்ஷனைச் சொல்லட்டுமா?''

''சொல்லும்மா...''

''அந்த ஆறு விரல் பெண் காணாமே போனது குறித்து யாருமே போலீஸ்ல கம்ப்ளைய்ண்ட் பண்ணியிருக்க மாட் டாங்க...''

''அப்படீன்னா அந்தப் பொண்ணு அநாதைப் பொண் ணாத்தான் இருக்கணும்...''

''மே...பி...''

''இல்லேன்னா.. அவ காணாமே போனதைப் பத்தி கவலைப் படாத குடும்பத்தைச் சேர்ந்த பொண்ணா இருக்கணும்...''

''இதுவும் மே...பி...''

விவேக் பெருமூச்சு விட்டான்.

''அந்த ஆறு விரல்காரியைக் கண்டு பிடிக்கணும்ன்னா ஒரே வழிதான் இருக்கு...''

''என்ன விவேக்?''

''எல்லா பத்திரிகைகளுக்கும், நியூஸ் கொடுக்க வேண்டியது தான்... அந்தப் பெண் சம்பந்தபட்டவங்க விஷயத்தை மறைச் சாலும்.. அவளைத் தெரிஞ்சவங்க யாராவது - மறைமுகமாக வாவது போலீஸுக்கு தகவல் சொல்லுவாங்க...''

''பிரயோஜனம் கிட்டுமா?''

''கல்லெறிஞ்சு பார்க்கலாம்..''

''அங்கிள்...'' ரூபலா கோகுல்நாத்தை ஏறிட்டாள்.

''என்னம்மா?''

''உங்க க்ரைம் பிராஞ்ச் ஆபீஸர் மேல நான் ஒரு கம்ப் ளைய்ண்ட் குடுக்கப் போறேன்.''

''விவேக் மேலயா? என்னான்னு?''

''தன்னோட பெண்டாட்டியை ஏமாத்திகிட்டே இருக்கார். போன மாசம் என்னை மெட்ராஸ் வெய்யிலில் விட்டுட்டு இவர் மட்டும் 'ஜம்'ன்னு காஷ்மீர் போய்ட்டு வந்தார். வந்த துமே சண்டை பிடிச்சேன். 'மதுரையில ஒரு பாராட்டு விழா இருக்கு.. அந்த ஒரு மணி நேர விழாவை முடிச்சுகிட்டு.. நேரா குற்றாலம் போறோம்.. அங்கிருந்து தேக்கடி போறோம்.. அங்கிருந்து மூணாறு போறோம்ன்னு... லிட்டர் லிட்டரா அளந்தாரு... நானும் உலக மகா சந்தோஷத்தோடு இவர் கூட புறப்பட்டு வந்தேன்.. பாராட்டு விழா முடிஞ்சு ஹோட்டல் ரூமுக்கு போறோம்.... போன் கால் வருது... காருக்குள்ளே ரெண்டு எலும்புக் கூடாம்... உடனே இந்தக் கடமை வீரர்...

குற்றாலத்தை மறந்தார்.. தேக்கடியை மறந்தார்.. என்னை மறந்தார்.. போலீஸோடு ஸ்பாட்டுக்கு கிளம்பி...'' கோகுல்நாத்திடம் கோபமாய் - பேசிக் கொண்டிருந்த ரூபலா -

''கொர்.. கொர்...'' என்ற சத்தம் கேட்டு திரும்பிப் பார்த்தாள். விவேக் சோபாவுக்குள் சாய்ந்து தூங்கிக் கொண்டிருந்தான்.



# 18



**ரா**த்திரி மணி எட்டு முப்பது.

மாருதி காரை நிதானமான வேகத்தில் விரட்டிக் கொண்டிருந்தான் ராஜன். உடம்பு பூராவும் சந்தோஷம் காற்றில் நிரம்பியிருந்தது. 'இருபது கிலோ தங்கம்! இதை யார்க்கும் தெரியாமல் விற்று காசாக்க வேண்டும். அதுவும் கொஞ்சம் கொஞ்சமாய் விற்க வேண்டும். திடீரென்று பணத்தில் புரண்டால்.. போலீஸுக்கு சந்தேகம் வரலாம்...''

யோசித்துக் கொண்டே அரசரடியைத் தாண்டும்போது - பஸ் ஸ்டாப்பில் தனியாய் நின்றிருந்த - அந்த இளம் பெண் கண்ணில் பட்டாள்.

அட! இவள் தரங்கிணி. போன வருஷம் வரைக்கும் மில்லில் டைப்பிஸ்ட்டாய் வேலை பார்த்தவள். பிறகு யாரையோ கல்யாணம் செய்துக் கொள்வதாகச் சொல்லி - வேலையை ராஜினாமா செய்தவள்.

காரை அவளருகே கொண்டு போய் நிறுத்தினான் ராஜன். வெளியே தலையை நீட்டிக் கூப்பிட்டான். ''தரங்கிணி.''

பஸ் வருகிறதாவென்று ஒரே திசையைப் பார்த்துக் கொண்டிருந்தவள் - ராஜனின் அழைப்பைக் கேட்டுத் திரும்பினாள். மலர்ந்தாள்.

''ஸார்.. நீங்களா?''

''நானே தான்! என்ன இந்த நேரத்துல இங்கே தனியா நின்னுட்டிருக்கே?''

''கொடை ரோடு வரைக்கும் அவசரமா போகணும் ஸார்.. அரை மணி நேரமா பஸ்ஸை எதிர்பார்த்திட்டிருக்கேன். எந்த பஸ் வந்தாலும் நிக்காமே போகுது...''

''கொடை ரோட்ல உன்னை ட்ராப் பண்ணினா போதுமா?''

''போதும் ஸார்...''

''அப்ப.. ஏறு...''

''தாங்க்யூ ஸார்...'' தரங்கிணி ஆர்வமாய் ஓடி வந்து - காரின் பின் சீட்டுக்குப்போனதும் ராஜன் காரை நகர்த்தினான். கேட்டான்.

''கல்யாணம் பண்ணிக்கப் போறேன்னு சொல்லி வேலையை ராஜினாமா பண்ணிட்டு போனே? கல்யாணம் பண்ணிகிட்டியா இல்லையா?''

''கல்யாணம் நடக்கலை ஸார்...''

''அட ஏன்?''

''நான் விரும்பின ஆசாமி ஒரு மோசடிப் பேர்வழியாம்... போலீஸ் கொண்டு போயிட்டாங்க.. அவன் இப்போ ஜெயில்ல இருக்கான்...''

''அப்படீன்னா நீ திரும்பவும் வேலைக்கு வந்திருக்கலாமே?''

''ஜம்பமா ராஜினாமா பண்ணிட்டு - மறுபடியும் உங்க கிட்ட வந்து வேலை கொடுங்கன்னு கேக்கிறதுக்கு எனக்கு சங்கோஜமா இருந்தது ஸார்.. அதுவுமில்லாமே எனக்கு வேற ஒரு பக்கம் வேலை கிடைச்சுடுச்சு ஸார்...''

''என்ன வேலை...?''

''வைகை வீடியோ ஷோ ரூமில் அதே டைப்பிஸ்ட் உத்யோகம்...''

''அது எங்கே இருக்கு?''

''செல்லூர்... திருவாப்புடையார் கோயில் தெருவுல...''

''எப்படியோ நல்ல வேலையில் இருந்தா சரி...''

''நம்ம மில்லு இப்போ எப்படி ஓடுது ஸார்...?''

''கொஞ்சம் 'சிக்'தான். போகப் போக சரியாயிடும்..'' - ரோட்டில் கொட்டிக்கிடந்த இருட்டை - காரின் ஹெட்லைட் விளக்குகள் பளிச்சிட்ட வெளிச்சத்தால் துடைத்துக் கொண்டே போக - கிலோ மீட்டர்களைச் சுலபமாய் விழுங்கியது மாருதி.

''கொடை ரோட்ல அப்படியென்ன அவசர காரியம்?''

''என்னோட கடை ஓனர் வீட்ல ஒரு விசேஷம் ஸார். எட்டு மணிக்கே என்னை வரச் சொல்லியிருந்தாங்க...''

தரங்கிணி சொல்லிக் கொண்டிருக்கும் போதே -

மாருதியின் வேகம் சட்டென்று குறைந்தது. ராஜன் ஹார்ன் கொடுத்துக் கொண்டே திட்டினான். ''காரை நடுரோட்ல.. எவனோ ஒருத்தன் நிறுத்தி.. ரிப்பேர் பார்த்திட்டிருக்கான். ஓரமா ஒதுங்கி நின்னு பார்க்கக் கூடாது?''

ரோட்டின் குறுக்கே அந்த அம்பாசிடர் கார் நின்றிருந்தது. ராஜன் மாருதியை அதற்குப் பின்னால் கொண்டு போய் நிறுத்தி - ஹார்ன் கொடுத்த அதே விநாடி - ரோட்டின் இரண்டு பக்கங்களிலும் கொட்டியிருந்த இருட்டினின்றும் -

அந்த இரண்டு பேர் குபீரென்று பாய்ந்து வந்து - ராஜனின் நெற்றியில் துப்பாக்கிகளைப் பதித்தனர். ஒருவன் உறுமினான்.

''இறங்கி... மரியாதையா.. அந்த அம்பாசிடர் கார்க்கு போ...''

''யா.. யார்.. நீங்க?''

''மொதல்ல.. அந்த அம்பாசிடர் கார்க்குப் போ... இல்லேன்னா உன்னையும் அந்தப் பொண்ணையும் தாறுமாறா சுட்டுக் கொல்ல வேண்டியிருக்கும்...''

ராஜன் வியர்த்துக் கொண்டே இறங்கினான்.

''ஏய்.. பொண்ணு.. உனக்குத் தனியாச் சொல்லணுமா? போய் நீயும் அந்தக் கார்ல ஏறு...''

''நா.. நான் அவசரமா.. கொடை ரோடு போகணும்...''

''கொடை ரோடுதானே போகணும்? போலாம்.. வா'' - ஒருவன் தரங்கிணியின் தோள்பட்டையைப் பற்றி இழுத்து கீழே இறக்கினான்.

அம்பாசிடர் கார் அரை வட்டம் அடித்துக் கொண்டு அவர்களை நெருங்கியது. நின்றது. கார்க்குள் இன்னும் இரண்டு பேர் இருந்தார்கள்.

''ம்...உள்ளே போங்க.. தயங்கித் தயங்கி நின்னுட்டிருந்தா முதுகுல தோட்டா குழி பறிக்கும்...''

ராஜனும் தரங்கிணியும் இருட்டடித்த முகங்களோடு - கார்க்குள் போனதும் - கதவு அறைந்து சாத்தப்பட்டது.

''ஜெகத்!'' ட்ரைவிங் ஸ்தானத்தில் இருந்தவன் கூப்பிட்டான்.

''ம்...'' கார்க்கு வெளியே நின்றிருந்தவன் பக்கத்தில் வந்தான்.

''நீ மாருதி காரை எடுத்துகிட்டு கிளம்பு. உனக்குக் குடுத்த இன்ஸ்ட்ரக்ஷன்படி நடந்துக்கோ.. ஜாக்கிரதை!''

அம்பாசிடர் கார் கிளம்பியது.

ராஜன் திமிறினான்.

''நீ.. நீ.. நீங்களெல்லாம் யா.. யாரு?'' - ஆத்திரமாய் கேட்டுக் கொண்டிருக்கும்போதே - தோள்பட்டையில் எதுவோ 'சுருக்' கென்று குத்தியது.

'பாவிகள்! ஏதோ இஞ்செக்ஷனைப் போடுகிறார்கள்' கையை உதறுவதற்காக ராஜன் முயல - கண்களில் புகைப்படலம் படிந்த மாதிரி உணர்ச்சி.

''மேய்'' - வாய் குழறியது. உடம்பு பிடிப்பில்லாமல் நழுவி பிழிந்த துணியாய் துவண்டான் ராஜன்.

''சேது! அந்த பொண்ணுக்கும் ஊசியைப் போட்டுடு... இவ நாம எதிர்பார்க்காத விருந்தாளி...''

தரங்கிணியின் தோள் பட்டையிலும் ஊசி பாய்ந்தது. அவள் கத்த முயன்று முடியாமல் - கண் சொருகிப் பக்கவாட்டில் சரிந்தாள்.

கார் வேகம் எடுத்து - அழகர் மலைக்கு போகும் ரோட்டைத் தேய்க்க ஆரம்பித்தது.

சரியாய் பத்து மணிக்கு அழகர் மலை.

அங்கிருந்து பழமுதிர்ச்சோலை போகும் மலைப்பாதையில் ஒரு பதினைஞ்சு நிமிஷப் பயணம். இருட்டில் ரோட்டை விட்டு விலகி - அந்த சகதிக்குளம் அருகே போய் நின்றது.

''சேது...''

''ம்...''

''இன்னமும் ரெண்டு பேர் நல்ல மயக்கத்துலதானே இருக்காங்க?''

''ஆமா..''

''தள்ளிடலாமா?''

''கார் சேசீஸ் நெம்பர், என்ஜின் நெம்பர் எல்லாத்தையும் எரேஸ் பண்ணிட்டியா?''

''காரைத் திருடினதுமே முதல் காரியம் அதுதானே...''

''நெம்பர் போர்டு?''

''அதையும் கழட்டியாச்சு...''

''சரி.. ராஜனையும், அந்தப் பொண்ணையும் பிறந்த மேனியாக்கு. உடம்புல துணியே இருக்கக் கூடாது...''

''இருந்துட்டுப் போகட்டுமே...''

''வேண்டாம்... எந்தச் சந்தர்ப்பத்திலாவது இந்த ரெண்டு பாடியும் போலீஸ் கைக்குக் கிடைக்க நேர்ந்தா.. ட்ரஸ் ஒரு முக்கியத் தடயமாயிடும்.. எல்லாத்தையும் உருவு...''

''பொண்ணு அழகாவே இருக்கா? இவளுக்கும் ராஜனுக்கும் என்ன உறவுன்னு தெரியலை... கார்ல ராஜன் மட்டும் வர்றதாகத்தானே ஹாரீஸ் நமக்குத் தகவல் கொடுத்தார்?''

''தங்கம் கிடைச்ச சந்தோஷத்துல எவளையாவது தள்ளிக்கிட்டு வந்திருப்பான். இந்தச் சகதிக்குளத்துல சமாதியாகணும்ன்னு இவளுக்கு விதி...''

''ட்ரஸ்ஸைக் கழற்ற கழற்ற அழகாவே இருக்கா... கொஞ்ச நேரம் இவளை ருசி பார்ப்பமா?''

''வேண்டாம்.. இங்கே தங்கற ஒவ்வொரு அதிகப்படியான நிமிஷமும் நமக்கு ஆபத்து.. நாளைக்குக் காலையில கோயில்ல ஏதோ விசேஷம் போலிருக்கு.. டூரிஸ்ட் பஸ்ஸுங்க நிறைய வந்துட்டிருக்கு.. காரியத்தை முடிச்சுட்டு சீக்கிரமா.. மலையைவிட்டு இறங்கற வழியைப் பார்ப்போம்.. ட்ரஸ்ஸை உரிச்சுட்டியா?''

''உரிச்சுட்டேன். உடம்புக்கட்டு இவளுக்கு அமர்க்களம்...''

''வேண்டாம்.. ஆசை காட்டாதே.. ரெண்டு பேர்க்கும் மயக்கம் தெளியறதுக்கு முன்னாடியே.. இந்த சகதிக் குளத்துல அம்பா சிடர் காரோடு சமாதி கட்டிடுவோம்...''

இருவரும் காரை விட்டு இறங்கினார்கள். ராஜனை ட்ரைவிங் சீட்டிலும் தரங்கிணியைப் பின் சீட்டிலும் கிடத்தினார்கள். பிறகு கார்க்குப் பின்புறமாய் சென்று - அதன் முதுகைப் பிடித்துத் தள்ளினார்கள்.

கார் அங்குலம் அங்குலமாய் முன்னோக்கி நகர்ந்தது. ஈரப் பசைச் சரிவில் முன் பக்க டயர்கள் பதிந்தது - சரசரவென்று வேகம் பிடித்து - ஒரு கை தேர்ந்த நீச்சல்காரனைப் போல்.. குளத்து நீரில் பாய்ந்தது.

அமிழ்ந்தது.

'க்ளக்.. ப்ளக்..' -என்ற சத்தங்களோடு தண்ணீர் பாஷை பேசிக் கொண்டு - கொஞ்சம் கொஞ்சமாய் மூழ்க ஆரம்பித்தது.

அரை நிமிஷ நேரம்தான்!

குளம் காரை விழுங்கி விட்டு - தவம் இருக்கும் சாமியார் மாதிரி சாதுவாய் காட்சியளித்தது.



## 19



**வி**வேக்கும் கோகுல்நாத்தும் - க்ரைம் பிராஞ்ச் அலுவலகத்தின் - உள்ளேயிருந்த அறையினுள் உட்கார்ந்து - 'மிஸ்ஸிங் யூத்ஸ்' லிஸ்ட்டைப் பார்வையிட்டுக் கொண்டிருந்தார்கள்.

''ஜூலை மாசத்தில் மட்டும்.. மதுரை டிஸ்ட்ரிக்கிட்டில் ஏழு இளைஞர்கள் காணாமே போயிருக்காங்க.. ஏழு பேரில்

ரெண்டு பேர் காலேஜ் ஸ்டூடண்ட்ஸ்.. முரளிதரன், சீனிவாசன்.. பரீட்சையில் பெயிலானதாலே ஊரைவிட்டு ஓடினவங்க... அடுத்தது ஒரு முஸ்லீம் இளைஞன் ஜாபர்ஷா. பெண்டாட்டி யோடு சண்டை போட்டுகிட்டுப் போனதா காரணம். நாலாவது பேர்வழி சோழவந்தானைச் சேர்ந்த ராஜன். அஞ்சாவது.. சிம்மக்கல்லைச் சேர்ந்த நாதன் என்கிற நாதமுனி... விவ சாயக்குடும்பம்.. ஆறாவது...''

''ஸார்...''

குரல் கேட்டுத் திரும்பினான் விவேக்.

கான்ஸ்டபிள் ஒருவர் நின்றிருந்தார்.

''எஸ்...''

''உங்களைப் பார்த்துப் பேசறதுக்காக ஒருத்தர் வந்திருக் கார் ஸார்...''

''யாரவர்?''

''கேட்டேன் ஸார்... உங்ககிட்டதான் சொல்லுவேன்னு கொஞ்சம் அடமெண்டா இருக்கார்...''

''வரச் சொல்லுங்க...''

கான்ஸ்டபிள் மறைந்ததும் - விவேக்கும் கோகுல்நாத்தும் அந்த நபர்க்காக காத்திருக்க ஆரம்பித்தார்கள்.

சில விநாடிகளுக்குப் பின் - அந்த நபர் உள்ளே வந்தார். நாற்பது வயதிருக்கலாம். வேஷ்டி சர்ட்டில் செண்ட் வாசனை யோடு இருந்தார். விவேக்கையும் கோகுல்நாத்தையும் பார்த்து ''வணக்கம்'' சொன்னார்.

விவேக் நாற்காலியைக் காட்டினான்.

''உட்கார்ங்க...''

அவர் உட்கார்ந்து கொண்டே சொன்னார்.''ஸார்... எம்பேர்.. ராம்பாபு.. வைகை வீடியோங்கிற பேர்ல ஒரு வீடியோ கேஸட் கடையை நடத்திட்டு வர்றேன். இன்னிக்குக் காலையில பேப்பர்ல ஒரு நியூஸ் பார்த்தேன். வலது காலில் ஆறு விரல் இருக்கிற ஒரு பொண்ணோட எலும்புக்கூடு கார்க் குள்ள கிடைச்சதாகவும்.. அந்தப் பொண்ணு யார்ங்கிறதுல போலீஸ் திணறிட்டிருக்கிறதாகவும் படிச்சேன். அதைப் பத்தி பேசலாம்ன்னுதான் உங்க கிட்டே வந்தேன்...''

விவேக் நிமிர்ந்து உட்கார்ந்தான்.

''அதைப் பத்தி என்ன சொல்லப் போறீங்க?''

''எங்க கடையில போன ஜூலை மாசம்.. தரங்கிணி யின்னு ஒரு பொண்ணை வேலைக்கு சேர்த்தோம் ஸார்.. அந்தப் பொண்ணுக்கு.. வலது கால்ல ஆறு விரல்...

விவேக் பிரகாசமானான்.

ராம்பாபு தொடர்ந்தார். ''ஜூலை மாசம் பதினேழாம் தேதி கொடை ரோட்டில் இருக்கிற என்னோட வீட்ல ஒரு பங்க்ஷன். அந்த பங்க்ஷனுக்கு தரங்கிணியையும் வரச் சொல்லி யிருந்தேன். ஆனா தரங்கிணி வரலை. அன்னியிலிருந்து அவ வேலைக்கும் வரலை...''

''உங்க பேர் என்னான்னு சொன்னீங்க?''

''ராம்பாபு..''

''உங்க கடை எங்கேயிருக்கு?''

''செல்லூர் திருவாப்புடையார் கோயில் தெருவுல..''

''அந்த தரங்கிணி எத்தனை நாளா உங்ககிட்டே வேலைக்கு இருந்தா?''

''ரெண்டு மாசமா...''

''அதுக்கு முந்தி எங்கே வேலை பார்த்தா?''

''ஏதோ மில்லுல.. டைப்பிஸ்டா இருந்திருக்கா.. மில்லு பேரு ஞாபகம் வரலை...''

''தரங்கிணிக்கு ஃபேமிலி கிடையாதா?''

''கிடையாதுன்னு சொன்னா ஸார்.. திருநகர்ல அவ மட்டும் தனியா ரூம் எடுத்துத் தங்கியிருந்தா...''

''ஜூலை மாதம் பதினேழாம் தேதியிலிருந்து.. தரங் கிணியைக் காணலைன்னு உங்களுக்குத் தெரியும். போலீஸ்ல ஏன் கம்ப்ளைய்ண்ட் பண்ணலை...''

''அவ காணாமே.. போயிட்டதா.. நான்.. நினைச்சிருந்தா.. கண்டிப்பா போலீஸ்ல கம்ப்ளைய்ண்ட் பண்ணியிருப்பேன் ஸார்.. ஆனா.. நான் நினைச்சதே வேறே?''

''என்ன நினைச்சீங்க?''

''அந்தத் தரங்கிணி யாரையோ ஒருத்தனைக் காதலிச்சிட் டிருந்ததா எனக்குத் தகவல் கிடைச்சது. அதுவுமில்லாமே எங்க கடையில வேலை பார்க்கவும்.. அவளுக்கு விருப்பமில் லாமே இருந்தது. வேற வேலை ஏதாவது கிடைச்சா.. இதை விட்டுட்டு போயிருவேன்னும்... இன்னொரு சேல்ஸ் கேர்ள் கிட்டே சொல்லியிருந்திருக்கா.. ஒவ்வொரு மாசமும் பதினஞ் சாம் தேதிதான் எங்க கடையில் சம்பளம் கொடுப்போம். அந்தக் குறிப்பிட்ட மாசம் பதினேழாம் தேதி காலையில் சம்பளம் குடுத்தோம். சம்பளம் வாங்கின கையோடு - வேலையை விட்டு நின்னிருக்கலாம்ன்னு நான் நினைச்சு.. போலீஸுக்கு போகாமே இருந்துட்டேன். இன்னிக்கு.. காலையில் பேப்பர் பார்த்து - அந்த ஆறு விரல் விஷயத்தைப் படிச்சதும்தான்... எனக்கு சந்தேகமே வந்தது. அந்தக் கார்க்குள்ளே இருந்த எலும்புக் கூட்டுக்கு சொந்தக்காரி நிச்சயமா.. தரங்கிணி யாகத்தான்.. இருக்க முடியும்.. ஸார்...''

விவேக்கும் கோகுல்நாத்தும் ஒருத்தரையொருத்தர் பார்த்துக்கொண்டார்கள். 'கேஸில் வெளிச்சம் அதிகமாயிருக்கிறது.'

விவேக் ராம்பாபுவை ஏறிட்டான்.

''தரங்கிணி திருநகர்ல எந்த அட்ரஸ்ல இருந்தான்னு சொல்ல முடியுமா?''

''எனக்குத் தெரியலை... ஸார்...''

''உங்க கடையில வேலை பார்த்த மத்தவங்களுக்குத் தெரியுமா?''

''நான் விசாரிச்சுப் பார்த்துட்டேன் ஸார்.. யார்க்கும்.. தெரியலை...''

''தரங்கிணி யாரையோ காதலிச்சிட்டிருந்ததா.... சொன்னீங்க... அந்த ஆள் யார்ன்னு தெரியுமா?''

''தெரியாது.. அதுவும் கேள்விப்பட்டதுதான்.''

''உங்க.. கடைக்கு வேலைக்கு வர்றதுக்கு முந்தி.. ஏதோ ஒரு மில்லுல தரங்கிணி வேலை பார்த்திட்டிருந்ததா சொன்னீங்களே.. அது எந்த மில்லுன்னு தெரியுமா?''

''தெரியலை ஸார்...''

''உங்க தகவலுக்கு ரொம்பவும் நன்றி மிஸ்டர் ராம்பாபு. உங்க விசிட்டிங் கார்டைக் குடுத்துட்டு போங்க.. இந்த கேஸ்ல மேற்கொண்டு தகவல்கள் கேள்விப்பட்டா.. உங்களைக் கான்டாக்ட் பண்றோம்...''

ராம்பாபு விடைபெற்றுக் கொண்டு போனதும் - விவேக் கோகுல்நாத்தை ஏறிட்டான். ''கோகுல்நாத்! அந்த மிஸ்ஸிங் யூத்ஸ் லிஸ்ட்டை எடுத்து ராஜனோட பர்ட்டிகுலர்ஸை படிங்க...''

"குறிப்பா அதை மட்டும் ஏன் படிக்கச் சொல்றீங்க விவேக்?"

"ராம்பாபு சொன்ன மில்லு சமாச்சாரம் அந்த பர்ட்டி குலர்ஸில் வந்ததா ஞாபகம்.. தரங்கிணி வேலை பார்த்த மில் அந்த மில்லாகவே இருக்கலாமே..."

கோகுல்நாத் லிஸ்ட்டை எடுத்து - ராஜனின் பர்ட்டி குலர்ஸை நிதானமான குரலில் படிக்க ஆரம்பித்தார். "பெயர் ராஜன், வயது 28, தொழில்: திண்டுக்கல்லில் உள்ள ஒரு டெக்ஸ்டைல்ஸ் மில்லுக்கு மானேஜிங் டைரக்டர். அப்பா பெயர் சிவசைலம். சொந்த ஊர் சோழ வந்தான். காணாமல் போன நாள் திட்டவட்டமாய் தெரியவில்லை. ஜூலை மாதத் தின் இரண்டாவது வாரத்தில் ஏதாவது ஒரு நாளாக இருக் கலாம். காணாமல் போனதற்கு காரணமாய் சொல்லப்படும் யூகங்கள்.. பார்த்துக் கொண்டிருக்கும் மில் தொழிலில் ஏராள நஷ்டம். பேங்க் கடன். அப்பா சிவசைலம் சாமியாராகப் போனதில் மனக்கஷ்டம். கடன்களுக்குப் பயந்து கொண்டு ஊரைவிட்டு ஓடியிருக்கலாம் என்பது - சொந்த ஊரில் பேசிக் கொள்ளும் பொதுவான கருத்து."

கோகுல்நாத் பர்ட்டிகுலர்ஸை படித்து முடித்ததும் - விவேக் கேட்டான். "போலீஸில் கம்ப்ளைய்ண்ட் கொடுத்தது யார்ங்கிற விவரம் அந்த பர்ட்டிகுலர்ஸ்ல.. இருக்கா கோகுல்நாத்?"

"இருக்கு.. மில் மானேஜர் மணிவேல். ஜூலை இருபத்தி மூணாம் தேதி கம்ப்ளைய்ண்ட் குடுத்திருக்கார். அவரோட அட்ரஸும் கீழே மென்ஷன் பண்ணியிருக்கு..."

"அட்ரஸ் மதுரையா? திண்டுக்கல்லா?"

"திண்டுக்கல் அட்ரஸ். எம்.எஸ். மணிவேல், நெம்பர் அறுபத் தெட்டு, இரண்டாவது தெரு, நேருஜி நகர், திண்டுக்கல்."

விவேக் வாட்ச்சைப் பார்த்துவிட்டு சொன்னான்.

''கோகுல்நாத்! இப்பவே நாம திண்டுக்கல் போறோம்.. அந்த மில் மானேஜர் மணிவேலைப் பார்க்கிறோம்...''



# 20



விவேக்கும், கோகுல்நாத்தும் திண்டுக்கல் நேருஜி நகர் போய்ச் சேர்ந்த போது மத்தியானம் ஒரு மணி. ஐம்பது வய தான மணிவேல் - தன்னுடைய வீட்டின் டைனிங் டேபிளில் - தயிர் சாதத்தின் கடைசியில் இருந்தார். போலீஸ் டிபார்ட் மெண்ட் என்று சொன்னதும் - தயிர் சாதத்தின் மிச்சத்தை இலையிலேயே வைத்துவிட்டு - மல் துண்டால் வாயை ஒற்றிக் கொண்டு வேக வேகமாய் வந்தார்.

''எஸ்...'' வரவேற்பறையில் இருந்த நாற்காலிகளைக் காட்டிவிட்டு தானும் உட்கார்ந்தார்.

''மிஸ்டர் மணிவேல்! காணாமல் போன ராஜனைப் பற்றி புகார் குடுத்தது நீங்கதானே?''

''ஆமா...''

''அவர் காணாமே போயிட்டதா நினைக்கறீங்களா? இல்லை.. தலைமறைவாயிட்டதா நினைக்கறீங்களா?''

''என்னோட நினைப்பு.. அவர் தலைமறைவாயிருக்கலாம்ங் கிறதுதான்...''

''ஏன் அப்படி நினைக்கறீங்க?''

''அவரோட சூழ்நிலைகள் அப்படி ஸார்...''

''என்ன சூழ்நிலை?''

''சிக் மில்லை ரன் பண்ண முடியாமே திணறிட்டிருந்தார். தொழிலாளர்களுக்கு போனஸ் பாக்கி - பேங்க்ல வாங்கின கடன்.. வெளியில் மார்வாடிகிட்டே ஏராள கடன்.. மில்லை வித்தாக்கூட கால்வாசி கடனை அடைக்க.. முடியாது. மனுஷன் என்ன பண்ணுவாரு...? குரல்வளையை இறுக்கிப் பிடிக்கிற கடன் தொல்லை தாங்காமே ஊரை விட்டே ஓடிட்டார்...''

''அவர் காணாமே போனது உங்களுக்கு எப்போ தெரிஞ்சது?''

''மிஸ்டர் ராஜனை நான் கடைசியா பார்த்தது... பதினேழாம் தேதி காலையில பத்து மணிக்கு.''

''எங்கே பார்த்தீங்க?''

''மில்லுல...''

''தென்?''

''அவர் சாயந்தரமா மதுரைக்கு புறப்பட்டு போனதா மில் சூபர்வைஸர் சொல்லக் கேள்விப்பட்டேன்...''

''மதுரைக்கு எதுல போனார்.. காரா?''

''ஆமா...''

''என்ன கார்?''

''மாருதி...''

''காரோடவே காணாமே போயிட்டாரா?''

''இல்ல.. பதினெட்டாந்தேதி காலையில அவரோட 'சோழ வந்தான்' வீட்டு காம்பௌண்ட் கேட்டுக்கு முன்னாடி.. மாருதி கார்.. நின்னுட்டிருந்தது. காரை அங்கே நிறுத்திட்டு அவர் எங்கே போனார்ன்னு தெரியாமே...பண்ணையாட்கள்ல சில பேர் மில்லுக்கு வந்து விசாரிச்சாங்க.. கடன் தொல்லை

யினால அவர் எங்கேயாவது தலைமறைவா போய் தங்கி யிருக்கலாம்ன்னு நான் அவங்களுக்கு சமாதானம் சொன் னேன். ஒரு வாரம் வரைக்கும் அவர்கிட்டயிருந்து எந்தத் தகவலும் வராமல் போகவே போலீஸில் கம்ப்ளைய்ண்ட் கொடுத்தேன்...''

விவேக் அவர் சொன்னதை செவிமடுத்து விட்டு - மெல்லிய குரலில் கேட்டான். ''உங்களுக்கு தரங்கிணியைத் தெரியுமா?''

அவர் நெற்றியில் ஆச்சர்யக் கோடுகள் விழுந்தன.

''தரங்கிணி?''

''எஸ்...''

''அந்தப் பொண்ணு ஆறு மாசத்துக்கு முன்னாடி வரை எங்க மில்லில்தான் வேலை பார்த்துட்டிருந்தா...''

விவேக் கோகுல்நாத்திடம் திரும்பி புன்னகைத்தான். ''ஒண்ணும் ஒண்ணும் ரெண்டு...''

''வீ... காட்... இட்...''

விவேக் மணிவேலை ஏறிட்டான்.

''அந்தப் பெண்.. ஏன் வேலையை விட்டு நின்னுட்டா?''

''கல்யாணம் பண்ணிக்கப் போறதா சொல்லிட்டு வேலையை ரிசைன் பண்ணிட்டா...''

''தரங்கிணி யாரையோ காதலிச்சாளாமே? காதலிக்கப் பட்ட ஆள் யார்ன்னு உங்களுக்குத் தெரியுமா?''

''தெரியாது...''

''ராஜனுக்கும் தரங்கிணிக்கும் மத்தியில் எந்த மாதிரியான உறவு இருந்ததுன்னு சொல்ல முடியுமா?''

''ராஜன் மில்லுக்கு மானேஜிங் டைரக்டர்.. தரங்கிணி மில்லோட அட்மினிஷ்ட்ரேஷன் ஆபீஸ்ல டைப்பிஸ்ட்... அவ்வளவுதான்...''

''அது உத்யோகபூர்வமான உறவு.. நான் 'மீன்' பண்ணி கேட்டது அந்த உறவையல்ல மிஸ்டர் மணிவேல்! அவங்களுக்கு மத்தியில் ஒரு விரும்பத்தகாத உறவு இருந்திருக்கலாம்.. அந்த உறவைப் பத்தி உங்களுக்கு ஏதாவது தெரியுமா?''

''எனக்கு தெரிந்தவரை ராஜன் அப்பேர்ப்பட்டவர் இல்லை...''

''தரங்கிணியோட வீட்டு அட்ரஸ் உங்களுக்குத் தெரியுமா?''

''எனக்குத் தெரியாது. ஆபீஸ் பைலில் பார்த்தாக் கிடைக்கும்.''

''அட்ரஸ் வேணும். மில் ஆபீஸ் வரைக்கும் வந்து எடுத்துத்தர முடியுமா?''

''மில் இப்போ பங்க்ஷன்ல இல்லை.. ஏறக்குறைய லாக் - அவுட் மாதிரி. இருந்தாலும் நீங்க போலீஸ் டிபார்ட்மெண்ட். நீங்க கேட்கிற தகவல்களை நான் குடுத்தாகணும்...'' - சொன்ன மணிவேல் எழுந்து உள்ளே போய் வேறு சர்ட்டில் - கையில் சாவித் கொத்தோடு வந்தார்.

''மில் எங்கே இருக்கு?''

''கரூர் ரோட்ல! ஜீப்லதானே வந்திருக்கீங்க?''

''ஆமா...''

''ஒரு பத்து நிமிஷத்துல போயிடலாம்...''

மில்லுக்குப் போய்ச் சேர பதினைந்து நிமிஷமாயிற்று. காம்பௌண்ட் கேட்டைத் திறந்து கொண்டு உள்ளே போனார்கள். ப்ளோ ரூம் செக்ஷனிலும், கார்டிங் செக்ஷனிலும் நூலாம்படைகள் அடை அடையாய் தொங்கியது. ஸ்பின்னிங்

பிரேம்களிலும், ட்ராயிங் பிரேம்களிலும் ஏராளமான தூசி. விவேக் கேட்டான்.

''எத்தனை நாளா மில் இப்படி மூடி கிடக்கு?''

''ராஜன் காணாமே போன ஒரு வாரத்திலிருந்தே...''

'அட்மினிஸ்ட்ரேசன் ஆபீஸ்' என்று போர்டு தொங்கிய - ஒரு சிறிய கட்டடத்திற்கு முன்பாக வந்து நின்றார்கள். மணி வேல் கதவைத் திறக்க - ஆபீஸ் ஹால் தூசி படிந்த மேஜை களோடும் - நாற்காலிகளோடும் கண்களுக்கு சிக்கியது.

உள்ளே நடந்தார்கள்.

''ராஜனோட அறை எது?''

''அதோ...'' மணிவேல் காட்டினார்.

''அந்த அறையோட சாவி உங்ககிட்டே இருக்கா?''

''இருக்கு...''

''திறங்க.. அவரோட ரூமைப் பார்த்துடலாம்...''

மணிவேல் கையிலிருந்து சாவிக் கொத்தில் - ஒரு சாவியை இனம் கண்டு எடுத்தபடி ராஜனின் அறையை நெருங்கி - பூட்டுக்கு விடுதலை கொடுத்தார்.

விவேக்கும் கோகுல்நாத்தும் உள்ளே நுழைந்தார்கள். எட்டடிக்கு எட்டடி பரப்புள்ள ஒரு பெரிய கண்ணாடி மேஜை யின் மேல் - தூசி ஆடையை அணிந்த நான்கைந்து வண் ணங்களில் டெலிபோன்கள். சிகரெட் துண்டுகள் நிரம்பிய ஆஷ்ட்ரே. பென் செட். இங்க் பாட்டில். பன்ச்சிங் மெஷின். ஸ்டாப்லர். கற்றையாய் சில ஃபைல்கள்.

கோகுல்நாத் சுவர் அலமாரியைத் திறந்து - அங்கிருந்த பொருள்களைக் கிளறிப் பார்த்துக் கொண்டிருக்க -

விவேக்கின் பார்வை -

மேஜையின் மையத்திலிருந்த - ஸ்டாண்டிங் டெய்லிஷீட் காலண்டரின் மேல் விழுந்தது.

**JULY**
**17**
Today - Be a good day
engagements
H.A. 8. P.M. 246611

விவேக் அந்தக் காலண்டரை கையில் எடுத்தான். ''ராஜன் கடைசியா இந்த ரூமுக்குள்ளே வந்த நாள் ஜூலை பதினேழு...'' - 17-ம் தேதி ஷீட்டின் மேல் மண்டியிருந்த தூசியை ஊதினான்.

''அவரைத் தவிர வேற யாரும் இந்த ரூமுக்குள்ளே நுழையக் கூடாது. அதனாலதான் காலண்டர் ஷீட்டைக் கூட கிழிக்கலை...''

விவேக் காலண்டர் ஷீட்டை உற்றுப் பார்த்தான்.

'டுடே - பீ ஏ குட் டே' என்ற வாசகத்துக்கு கீழே எங்கேஜ்மெண்ட்ஸ் 'ஹெச்.ஏ.8 பி.எம். 246611' என்று கிறுக்கலாய் எழுதப்பட்ட வாசகம் தெரிந்தது. விவேக் மணிவேலிடம் அந்த காலண்டர் ஷீட்டைக் காட்டினான்.

''ஹெச்.ஏ...ன்னா... என்ன அர்த்தம்?''

''தெரியலையே?''

''அதுக்குப் பக்கத்துல '8 பி.எம்.' போட்டிருக்கு. அது நேரம்.. நேரத்துக்குப் பக்கத்துல '246611'ன்னு ஒரு நெம்பர் எழுதியிருக்கு. அது டெலிபோன் நெம்பராயிருக்கலாம். இந்த டெலிபோன் நெம்பர் உங்களுக்கு பரிச்சயமான நெம்பரா மிஸ்டர் மணிவேல்?''

பார்த்து விட்டு ''இல்லை'' என்றார் அவர்.

கோகுல்நாத் பக்கத்தில் வந்தார்.

''அந்த நெம்பர்க்கு டயல் பண்ணிப் பார்த்துடுங்க விவேக்...''

"டெலிபோன் லைன் உயிரோடு இருக்கா?"

"எப்படி ஸார் உயிரோடு இருக்கும்? டெலிபோன் பில், கரண்ட் பில் கட்டி ஆறுமாசமாச்சு..."

"சரி.. இந்த போன் நெம்பரை.. மதுரைக்கு போய் ட்ரை பண்ணலாம். நீங்க அந்தத் தரங்கிணியோட வீட்டு அட்ரஸை எடுத்துக் குடுங்க..."

"வாங்க.."

மணிவேல் அறைக்கு வெளியே கூட்டிக் கொண்டு போனார். போகிற வழியில் விவேக் கேட்டான். "ராஜனோட போட்டோ ஏதாவது கிடைக்குமா?"

"தர்றேன்..."



## 21



**ம**துரை. ஹோட்டல் தமிழ்நாடு. சாயந்தரம் ஐந்து மணி. ரூபலாவும் கோகுல்நாத்தும் ஆர்வமாய் பார்த்துக் கொண்டிருக்க - விவேக் டெலிபோன் டயலைச் சுழற்றிக் கொண்டிருந்தார். ட்டூ ஃபோர் டபுள் சிக்ஸ் டபுள் ஒன்...

மறுமுனையில் ரிங் போயிற்று. இரண்டாவது ரிங்கிலேயே ரிஸீவர் எடுக்கப்பட்டது.

ஒரு பெண் குரல் மிழற்றியது.

"குட் ஈவினிங்.. ஹோட்டல் ஆர்த்தி ஹியர்..."

"தாங்க்யூ..." - ரிஸீவரை வைத்தான் விவேக்.

ரூபலா வியப்பாய் கேட்டாள். "என்னங்க.. 'பட்'ன்னு தாங்க்யூ சொல்லி ரிஸீவரை வெச்சுட்டீங்க... 'ஹெச். ஏ' என்னான்னு விசாரிக்க வேண்டாம்?"

''எதுக்காக விசாரிக்கணும்? அவதான் அதுக்கும் சேர்த்து பதில் சொல்லிட்டாளே. 'ஹெச்' ஃபார் 'ஹோட்டல்' 'ஏ' ஃபார் 'ஆர்த்தி'.. ராஜன் ஜூலை மாசம் பதினேழாம் தேதி.. ராத்திரி எட்டு மணியளவில் அந்த ஹோட்டலில் யாரையோ மீட் பண்ணியிருக்கார். அவர் யாரை மீட் பண்ணியிருக்கக் கூடும்ங் கிறதை ஹோட்டலுக்கு போய்த் தான் விசாரிக்கணும். கோகுல் நாத்...''

''நான் கிளம்பிட்டேன்...''

ஜீப்பில் சில நிமிஷ பயணம்...

ஹோட்டல் ஆர்த்தி வந்தது.

ரிசப்ஷன் கெளண்டரிலிருந்த பெண்ணுக்கும் ஹோட்டல் மானேஜர்க்கும் விவேக் தன் உத்யோக அட்டையைக் காட்டி - உதற வைத்தபடி கேட்டான்.

''போன ஜூலை மாசம் பதினேழாம் தேதி.. இந்த கெளண் டரில் யார் இருந்தாங்கன்னு சொல்ல முடியுமா?''

மனேஜர் பழைய ஷெட்யூல் சார்ட்டை புரட்டிப் பார்த்து விட்டு கெளண்டரில் நின்றிருந்த பெண்ணைப் பார்த்து, ''மிஸ் சீமா! நீங்கதான் அந்த தேதியில் இருந்திருக்கீங்க?'' என்றார்.

சீமா மேலுதட்டில் வியர்த்து விவேக்கை ஏறிட்டாள். பயம் விரவிய குரலில் கேட்டாள்.

''உங்களுக்கு என்ன தகவல் ஸார் வேணும்?''

விவேக் தன் சட்டைப் பாக்கெட்டில் இருந்த - ராஜனின் போட் டோவை எடுத்து - சீமாவின் முகத்துக்கு நேரே பிடித்தான்.

''இவரை நீங்க பார்த்திருக்கீங்களா?''

சீமா பார்த்து விட்டு உதட்டைப் பிதுக்கினாள்.

''பார்த்ததில்லை...''

''நீங்க இவரைப் பார்த்திருக்கணுமே! போன ஜூலை மாசம் ராத்திரி எட்டு மணி சுமார்க்கு இவர் இந்த ஹோட்டலுக்கு வந்திருக்கார். யாரையோ சந்திச்சுட்டுப் போயிருக்கார்...''

''ஸாரி ஸார்! நீங்க ஆறு மாசத்துக்கு முந்தி - இந்த ஹோட்டலுக்கு வந்த யாரையோ பத்திக் கேட்டா எனக்கு எப்படி ஞாபகமிருக்கும்?''

போட்டோவை ஹோட்டல் மானேஜரின் முகத்துக்கு நேராய் பிடித்தான் விவேக். ''நீங்க இவரைப் பார்த்திருக்கீங்களா ஸார்?''

மானேஜர் பார்த்துவிட்டு லேசாய் புருவங்களை உயர்த்தினார். ''எஸ்.. இவரை.. அ.. அடிக்கடி.. இந்த ஹோட்டலுக்கு கீழே இருக்கிற அண்டர் க்ரௌண்ட் பார் செக்ஷன்ல பாத்திருக்கேன்... ஆனா நீங்க சொன்ன தேதியில் இவர் 'பார்'க்கு வந்திருக்க முடியாது.''

''ஏன்?''

''மே, ஜூன், ஜூலை மூணு மாசமும் 'பார்' செக்ஷனை க்ளோஸ் பண்ணி வெச்சிருந்தோம்.''

''எங்கேஜ்மெண்ட் ஸ்லிப்பில் உங்க ஹோட்டல் பெயரையும், நேரத்தையும், போன் நெம்பரையும் அவர் குறிச்சு வெச்சிருக்கார்ன்னா.. அது நிச்சயமா 'பார்'க்கு வர்றதுக்காக இருக்காது.. ஜூலை பதினேழாம் தேதி திண்டுக்கல்லிலிருந்து - உங்க ஹோட்டலுக்குபோன் பண்ணி - இங்கே தங்கியிருந்த நபர்களோடு ராஜன் பேசியிருக்கணும்..பேசின பிறகுதான் டயத்தை ஃபிக்ஸ் பண்ணியிருக்கணும்...''

மானேஜர் குழப்பமாய் தாடையைத் தடவ - விவேக் தொடர்ந்தான். ''ஜூலை மாசம் பதினேழாம் தேதி இந்த

ஹோட்டலில் தங்கியிருந்த எந்த நபர்க்காவது திண்டுக்கல்லி லிருந்து ட்ரங்க்காலோ... எஸ்.டி.டி.யோ வந்திருந்தா அதை டெலிபோன் ரெஜிஸ்டர்ல பதிஞ்சிருப்பீங்க இல்லையா?''

''ஆமா...ஸார்...''

''ராஜனோட திண்டுக்கல் டெலிபோன் நெம்பர் 223378. இந்த நெம்பர் அந்த ரெஜிஸ்டர்ல இருக்கான்னு பாருங்க...''

மானேஜர் ஷெல்ப்பில் இருந்த - டெலிபோன் ரெஜிஸ் டரை எடுத்து - பக்கங்களைப் பின்னோக்கி புரட்டி - ஜூலை பதினேழாம் தேதியை எடுத்தார்.

''நெம்பர் என்ன ஸார்.. சொன்னீங்க?''

''டபுள் ட்டூ டபுள் த்ரீ ஸெவன் எய்ட்...''

மானேஜர் லெட்ஜரில் விரலை நகர்த்திக் கொண்டே வந் தார். விரல் நின்றதும் நிமிர்ந்தார்.

''அந்த நெம்பர் இருக்கு ஸார்...''

''யார் கூடப் பேசியிருக்கார்ன்னு பாருங்க...''

''மிஸ்டர் ஹாரீஸ்.. ப்ரம் ஆஸ்ட்ரேலியா...''

''வெளிநாட்டு ஆசாமியா?''

''எஸ்...''

''ரூம் நெம்பர்?''

மானேஜர் மறுபடியும் லெட்ஜரைப் பார்த்து விட்டு சொன் னார். விவேக் நெம்பரைக் குறித்துக் கொண்டே சொன்னான். ''ராஜன் ஜூலை பதினேழாம் தேதி ராத்திரி எட்டு மணிக்கு மிஸ்டர் ஹாரீஸைச் சந்தித்து பேசறதுக்காக வந்திருக்கலாம்.. ஹாரீஸோட ரூம் சர்வீஸைக் கவனிச்சுகிட்ட பேரர் யாரு?''

''இரண்டாவது மாடி என்னிக்குமே கதிரேசன்தான்...''

''கதிரேசன் இருந்தா.. கூப்பிடுங்க...''

மானேஜர் யார்க்கோ தகவல் அனுப்ப - வெள்ளை யூனி பார்மில் கதிரேசன் வந்தான். விவேக் அவன் தோளில் தோழமையோடு கையைப் போட்டான்.

''கதிரேசன்! ரெண்டாவது மாடி சர்வீஸ் நீதானே?''

''ஆமா.. ஸார்...''

''ஆஸ்திரேலியாவிலிருந்து வந்து இந்த ஹோட்டல்ல தங்கியிருந்த ஹாரீஸை உனக்கு ஞாபகமிருக்கா?''

''ஞாபகமிருக்கு ஸார்...''

''அவர் எத்தினி நாள் தங்கியிருந்தார்?''

''ஒரு வாரம் இருக்கும் ஸார்...''

''அவரைப் பார்க்க யார் யார் வந்தாங்கன்னு தெரியுமா?''

''அவரைப் பார்க்க யாருமே வரலை ஸார்.. ஆனா ஒரே ஒரு நாள் மட்டும் ராத்திரி எட்டு மணிக்கு மேல - கையில ப்ரீப்கேஸோடு ஒருத்தர் அவரைப் பார்க்க வந்தார்.''

''இவரா?''

ராஜனின் போட்டோவைக் காட்டினான் விவேக். கதிரேசன் போட்டோவை உற்றுப் பார்த்து விட்டுத் தலையாட்டினான்.

''ஆமா ஸார்.. இவர்தான்...''

''இவர் ரூமுக்குள்ளே எவ்வளவு நேரம் இருந்தார்?''

''ஒரு பதினைஞ்சு நிமிஷம் இருக்கும்...''

''எப்படி அவ்வளவு கரெக்டா சொல்றே?''

''ஸார்.. பொதுவா ஹோட்டல் ரூம்ஸ்ல தங்கியிருக்கிற வங்க - விசிட்டர்ஸ் யாராவது வந்தா.. உடனே சாப்பிட

ஏதாவது ஆர்டர் பண்ணுவாங்க.. நானும் அதை எதிர்பார்த்து - வாசல்ல காத்திட்டிருந்தேன். ஆனா ஹாரீஸ் என்னைக் கூப்பிடலை.. பதினைஞ்சு நிமிஷமானதும் - உள்ளே போன வர் வேற ஒரு ப்ரீப்கேஸோடு வெளியே வந்து புறப்பட்டுப் போயிட்டார்.''

''வேற ப்ரீப்கேஸா?''

''ஆமா... ஸார்.. அவர் உள்ளே போகும் போது ப்ளு கலர்ல ப்ரீப்கேஸ் வெச்சிருந்தார். வெளியே வரும்போது அவர் கையில் ஆலீவ் க்ரீன் ப்ரீப்கேஸ் இருந்தது.''

''ஹாரீஸ் ரூமை எப்போ காலி பண்ணினார்?''

''இன்னும் ரெண்டு நாள் தங்கியிருக்கப் போறதா சொல் லிட்டிருந்த ஹாரீஸ் இந்த போட்டோவில் இருக்கிற ஆசாமி - வெளியே புறப்பட்டுப் போனதும் - ரூமை காலி பண்ணி கிட்டு உடனே கிளம்பிட்டார்.''

விவேக் ஹோட்டல் மானேஜரிடம் திரும்பினான். ''ஹாரீஸ் என்னிக்கு ரூம் எடுத்திருக்கார்ன்னு லெட்ஜர்ல பாருங்க...''

மானேஜர் லெட்ஜரைப் புரட்டினார். ஜூலை மாதத் தேதி களை வரிசையாய் பார்த்துக்கொண்டே வந்து நிமிர்ந்தார்.

''பத்தாம் தேதி ஸார்...''

விவேக் அந்த லெட்ஜரின் பக்கத்தைப் பார்த்தான். நேம் அண்ட் அட்ரஸ் பகுதியில் ஏ.டபிள்யூ. ஹாரீஸ், 1091. சி.ஜி. மிராண்டா அவென்யூ,சிட்னி, ஆஸ்திரேலியா. பர்ப்பஸ் ஆஃப் விசிட் சைட் சீயிங்.

அந்தப் பக்கத்தையே உற்றுப் பார்த்தான். பின் கோகுல் நாத்திடம் திரும்பிச் சொன்னான். ''இந்தப் பக்கத்தை ஜெராக்ஸ் எடுத்துக்குங்க.. கோகுல்நாத். இதுல ஒரு 'க்'ன்னா இருக்கு...''

கோகுல்நாத் புரியாமல் தலையாட்டிக் கொண்டார்.



# 22



இரண்டு நாள் கழித்து -

விவேக்கும் கோகுல்நாத்தும் மறுபடியும் ஹோட்டல் ஆர்த்திக்கு வந்தார்கள். மானேஜரிடமும் ரிசப்ஷனிஸ்டிடமும் விவேக் கேட்டான்.

''ஹாரீஸ் உருவத்தை உங்களாலே ஞாபகத்துக்கு கொண்டு வர முடியுமா?''

மானேஜர் சொன்னார். ''எஸ்... ஐ.. கேன் ஸார்.. ஹாரீஸ் நல்ல உயரத்தில் இருந்தார். கோபால்ட் நீலத்தில் கண்கள்.. செம்பழுப்பு தலைமுடி...''

''தங்கியிருந்த ஒரு வாரமும் அவர் தன்னோட அறையை விட்டு வெளியே வந்திருக்க மாட்டாரே?''

''ஆமாம்...''

''சைட் சீயிங்கிற்காக வந்தவர் வெளியே ஏன் போகலை?''

''காரணம் தெரியலை ஸார்...''

''காரணம் இப்போ வெளியே வந்தாச்சு...'' மானேஜர் குழப்பமாய் பார்க்க விவேக் தொடர்ந்தான். ''உங்க ஹோட்டலில் தங்கியிருந்த நபர் ஹாரீஸே கிடையாது. இவர்தான் உண்மையான ஹாரீஸ்...'' - கையிலிருந்த கவரைப் பிரித்து - உள்ளேயிருந்து ஒரு போட்டோவை உருவி மானேஜரிடம் நீட்டினான் விவேக். மானேஜர் வாங்கிப் பார்த்தார்.

சக்கர நாற்காலியில் வழுக்கைத் தலையோடு - வயோதிகமாய் குள்ளமாய் கூன் போட்ட சைஸில் ஒரு உருவம் உட்

கார்ந்திருந்தது. திகைத்த மானேஜரிடம் கோகுல்நாத் சொன்னார்.

''உங்க லெட்ஜர்ல குறிப்பிட்டிருந்த அட்ரஸை 'இன்டர்போல்' போலீஸ் மூலமா கான்டாக்ட் பண்ணினோம். மிஸ்டர் ஹாரீஸ் புராதன கலைச் சிற்பங்களை சேகரித்து ஆர்ட் காலரி ஒன்றை நடத்தி வருகிறார். சென்ற வருஷம் அவர் பக்கவாத நோயால் பாதிக்கப்பட்டு சக்கர நாற்காலியே தன் உலகம் என்று எண்ணி - நாட்களை நகர்த்தி வருகிற அறுபது வயது நபர். ஆனால் அவருடைய பெயரையும் - அட்ரஸையும் உபயோகப்படுத்தி - யாரோ ஒரு நபர் இந்த ஹோட்டலில் தங்கி - ராஜனோடு ஏதோ ஒரு நிழல் காரியம் பண்ணியிருக்கார். பேரர் கதிரேசனின் ஸ்டேட்மெண்டிலிருந்து - இரண்டு பேரும் சூட்கேஸ்களை மாற்றியிருக்கிறார்கள் என்கிற விஷயம் ஏற்கனவே வெளிச்சத்திற்கு வந்திருக்கிறது.''

விவேக் குறுக்கிட்டு தொடர்ந்தான். ''ராஜன் ப்ரீப் கேஸோடு வெளியே போனதுமே 'ஹாரீஸ்' ரூமை காலி பண்ணிகிட்டு போயிருக்கான். உங்க லீவிங் ரெஜிஸ்டர் படி அவன் மெட்ராஸ் போய் - மெட்ராஸிலிருந்து சிட்னி போயிருக்கணும். ஆனா மெட்ராஸ் இன்டர்நேஷனல் ஏர்போர்ட் ட்ரிப்ஷீட்களில் - ஜூலை மாதத்திலிருந்து - இந்த தேதி வரைக்கும் ஏ.டபிள்யூ. ஹாரீஸ் என்கிற பெயரே இல்லை. ஸோ.. ஹாரீஸ் ஒரு லோக்கல் ஆசாமி... அவன் தமிழ் நாட்டுக்குள்ளேதான் இருக்கான். அவன் யாராயிருக்கணும்ங்கிறதை ஓரளவு கெஸ் பண்ணிட்டேன்...''

''யார்.. ஸார்.. அவன்?''

''மெட்ராஸுக்கு போய் கன்பர்ம் பண்ணிட்டு வந்து சொல்றேன்... கோர்ட்ல அவனை அடையாளம் காட்டப் போறதே நீங்க தானே?''



## 23



மெட்ராஸ். மரங்கள் சூழ்ந்த மாணவர் விடுதி. பி.ஹெச்.டி. ஸ்டூண்ட்ஸ் பிளாக்கில் 32-ம் எண்ணிட்ட அறை.

துரையரசனை நடுவில் இருத்தி - பக்கத்திற்கொருவராய் உட்கார்ந்திருந்தார்கள் விவேக்கும் கோகுல்நாத்தும்.

"சொல்லு துரையரசன்! ஹாரீஸா உன்னை மாத்திகிட்டு ஆர்த்தி ஹோட்டல்ல வந்து தங்கினது நீதானே?"

"நோ.. நானில்லை..." துரையரசன் வியர்த்துப் போய் கத்தினான். "நான் எதுக்காக வேஷம்போடணும்? நீங்க யாரையோ கேக்க வேண்டிய கேள்விகளையெல்லாம் என்கிட்ட வந்து கேட்டுட்டிருக்கீங்க?"

விவேக் புன்னகைத்தான். "நான் வெச்ச புள்ளி என்னிக்குமே பிசகினதா சரித்திரமே கிடையாது.. சிவசைலம் வீட்ல இருந்த பண்ணையாட்களையும் பக்கத்தில் இருக்கிற உன்னோட ஃப்ரெண்ட் ரமேஷையும் ராஜன் காணாமே போனது சம்பந்தமா விசாரிக்கப் போனோம். எதுக்காக விசாரிக்கப் போனோம்ங்கிறதை நீ தெரிஞ்சுக்க வேண்டாமா? கோகுல்நாத்! ஹோட்டல் ஆர்த்தி ரெஜிஸ்டரில் எடுத்த அந்த ஜெராக்ஸ் காப்பியைக் கொடுங்க..."

கோகுல்நாத் எடுத்துக் கொடுத்தார்.

விவேக் அதை வாங்கி - துரையசனிடம் காட்டிக் கொண்டே சொன்னான். "ஹோட்டலில் ரூம் எடுக்கும்போது உன்னையும் அறியாமே நீ ஒரு தப்பு பண்ணியிருக்கே! நேம் அண்ட் அட்ரஸ், பர்ப்பஸ் ஆப் விசிட்.. எல்லாக் காலங்களையும் பூர்த்தி பண்ணின ரிசப்ஷனிஸ்ட் - சிக்னேச்சர் அண்ட் டேட்,

காலத்துல உன்னைக் கையெழுத்துப் போடச் சொல்லி யிருக்கா.. பேனாவை வாங்கி - பழக்கத் தோஷத்திலே நீ 'ஹாரீஸ்'ங்கிறதை மறந்து - துரையரசன்னு கையெழுத்துப் போட்டு - பிறகு அதைப் பாதியிலேயே நிறுத்தி - அடிச்சுட்டு... அப்புறமா ஹாரீஸ்ன்னு கையெழுத்து போட்டிருக்கே. நீ அடிச்ச அந்தப் பாதி பேர்ல 'டி.யூ' நல்லாவே தெரியுது.. இது சின்ன விஷயம்தான். இன்னும் கொஞ்சம் கவனமா இருந் திருந்து 'டி.யூ' வையும் நல்லா அடிச்சிருந்தா.. உன்னை எங்க ளாலே ஸ்மெல் பண்ணியிருக்கவே முடியாது. 'டி.யூ'ன்னு தொடங்கற எழுத்துக்களில் ராஜனுக்கு யார் ஃப்ரெண்ட்ஸா இருக்காங்கன்னு ஒரு லிஸ்ட் எடுத்துப் பார்த்தோம். அதுல யாரும் இல்லை. அப்புறம்தான் சிவசைலம் வீட்டுப் பண்ணை யாட்களையும் - அந்த கிராமத்துல இருக்கிற ரமேஷையும் விசாரிச்சுப் பார்த்தோம். துரையரசன்ங்கிற நீயும் புனி தாங்கிற உன்னோட 'பெட்'டும் அந்த கிராமத்துக்கு வந்து போன விவரம் தெரிஞ்சுது. சோழவந்தான்ல இருக்கிற கோயில்களையே - ஆராய்ச்சி பண்ண நீ காட்டின ஆர்வம் புரிஞ்சுது. இப்ப.. சொல்லு... ஹாரீஸ் நீதானே?''

''நோ.''

'''எஸ்'ங்கிறதுக்கு ஒவ்வொரு ஆதாரமா சொல்லிட்டு வர்றேன். கவனமா கேளு துரையரசன்... முதல் ஆதாரம் ஆஸ்திரேலியாவில் இருக்கிற உண்மையான - ஹாரீஸ் ஒரு புராதன சிற்ப நேசிப்பாளர். அவரைப் பத்தின விவரங்கள் உன்னை மாதிரியான ஒரு ஆராய்சி மாணவனுக்குத்தான் தெரியும். வேற யாரும் இந்தப் பெயரை உபயோகப்படுத்த வழியே இல்லை.''

துரையரசன் அதிகமாய் வியர்த்தான்.

''ஆதாரம் ரெண்டு. நான் நேற்றைக்கே மெட்ராஸ் வந்து உன்னோட ரூம் மேட் ரமணனை தனியா மடக்கி போலீஸ்

ஸ்டேஷனுக்கு கொண்டு போய் விசாரிச்சோம். போன ஜூலை மாசம் மவுண்ட் ரோட்டில் இருக்கிற கோஹினூர் சலூனில் உன்னோட தலைமுடியை - செம்பட்டை முடியா மாத்திகிட்ட விபரமும் - பிறகு வந்து பத்து நாளைக்குள்ளே அந்த செம்பட்டை முடி.. பிடிக்கலைன்னு சொல்லி மொட்டை போட்டுகிட்ட விவரமும், கோபால்ட் நிற கான்டாக்ட் லென்ஸ் எங்கே கிடைக்கும்ன்னு நீ அவன்கிட்ட விசாரிச்ச விவரமும்... ட்யூப் லைட் போட்ட மாதிரி வெளிச்சமாயிடுச்சு... இப்ப சொல்லு.. ஹாரீஸ் நீ தானே?''

''வந்து.. வந்து...'' துரையரசன் பேசத் திணறினான். விவேக் அவன் தோள் மேல் கையை வைத்தான். ''உன்னை செமத்தியா கார்னர்.. பண்ணிட்டோம். உன்னால தப்பிக்கவே முடியாது. உன்னை நாங்க இங்கே விசாரிச்சிட்டிருக்கிற இதே நேரத்தில் உன்னோட 'பெட்' புனிதாவும் பெண் போலீஸ் கிட்டே வேர்த்து வழிஞ்சுகிட்டிருப்பா.. நீ உண்மையைச் சொல்லாமே போனாலும் அவ உண்மையை சொல்லத்தான் போறா...''

''நா.. நானே சொல்லிடறேன் ஸார்...''

''மகாராஜனா.. சொல்லு.. அதுக்காகத்தானே மெனக்கெட்டு வந்திருக்கோம்....''

துரையரசன் உதட்டை நாவால் நீவிக் கொண்டு சொல்ல ஆரம்பித்தான். ''ஸாரி! கோயில்களையும் அதிலுள்ள சிற்பங்களையும் ஆராய்ச்சி பண்ற படிப்பை மேற்கொண்டிருந்த எனக்கும் புனிதாவுக்கும் சோழ வந்தான் சிவசைலம் வீட்ல நவரத்னம் பதிச்ச நவபாஷாண விஷ்ணு சிலை இருக்கிறதா தகவல் கிடைச்சது?''

''தகவலைச் சொன்னது யாரு?''

''அ.. அது.. வந்து...''

''இனிமே என்ன மறைக்க வேண்டியிருக்கு? கக்கிடு...''

''சிவசைலம் வீட்டில் பண்ணையாளா வேலை பார்க்கிற கிட்டான் எங்க ஊர்க்காரன். நான் கோயில் சிற்பங்களை ஆராய்ச்சி பண்றதை தெரிஞ்சுகிட்டு.. அவனாகவே வலிய வந்து அந்த விவரத்தைச் சொன்னான். அந்த சிலையை வீட்டுக்குள்ளே இருக்கும் ஒரு நிலவறையில் வெச்சு ஒவ் வொரு அமாவாசைக்கும் பூஜை பண்றதாகவும் சொன்னான். அந்த சிலை நம்ம கைக்கு வந்தா.. எந்த வெளிநாட்டுக் காரனுக்காவது வித்து லட்ச லட்சமா பணத்தை சம்பாதிச் சுடலாம்ன்னு சொன்னான். அந்த சிலை உண்மையாவே சிவசைலத்துகிட்டே இருக்கா இல்லையான்னு தெரிஞ்சுக் கிறதுக்காக.. நான் ஹாரீஸா மாறி - திண்டுக்கல் மில்லில் ராஜனை சந்திச்சு பேசினேன். ஏதாவது ஒரு நவபாஷாண கோயில் சிலை எனக்குக் கிடைச்சா இருபது கிலோ தங்க பிஸ்கெட்ஸ் தர்றதா ஆசை காட்டினேன். ஏற்கனவே பொருளா தார நெருக்கடியில் இருந்த ராஜன் - தனக்கு தெரிஞ்ச ஒருத்தர் கிட்டே சிலை இருக்கிறதாகவும் இன்னும் பத்து நாள்ல அதைக் கொண்டு வந்து தர்றதாகவும் சொன்னான். நான் ஹாரீஸா மாறுவதற்கு முந்தி - என் பேர்ல எந்த சந்தேகமும் யார்க்கும் வந்துடக் கூடாதேங்கிறதுக்காக.. நானும் புனிதா வும் கோயில் ஆராய்ச்சியை மேற்கொள்கிற மாதிரி சோழ வந்தான் கிராமத்துக்கு வந்தோம். ஒருவேளை ராஜன் மூலமா போலீஸ் - இந்த சிலை திருட்டை மோப்பம் பிடிச்சாலும் பழி 'ஹாரீஸ்' மேல வரணும்ங்கிறதுதான் என்னோட திட்டம்...''

''இந்த திட்டத்துக்கு யார் யார் உதவி பண்ணினாங்க?''

''புனிதாவோட அண்ணன்கள் ரெண்டு பேரும்... என் னோட ஃப்ரெண்ட்ஸ் ரெண்டு பேரும்...''

''ரூபன் ஆர்ட்ஸ் பாண்டியனோட காரைக் கடத்தினது அவங்க தானா?''

''ஆமா...''

''ராஜனையும் தரங்கிணியையும் எதுக்காக தீர்த்துக் கட்டி னீங்க?''

''தரங்கிணி யார்ன்னே எங்களுக்குத் தெரியாது. தங்க முலாம் பூசின இரும்புத் துண்டுகளை ராஜன் அடையாளம் கண்டுபிடிச்சுட்டா அவனால ஏதாவது பிரச்சனை வரலாம்னு நினைச்சோம். அதுக்காக தீர்த்துக் கட்ட முடிவு பண்ணினோம். ஏதாவது ஒரு காரைத் திருடி - அந்த காரோடு ஜலசமாதி செய்ய.. அழகர் மலைக்கு மேலே இருந்த சகதிக்குளத்தை தேர்ந்தெடுத்தோம்.. கார்ல வந்த தரங்கிணியை நாங்க எதிர் பார்க்கலை.. அவளை உயிரோடு விட்டா.. விஷயம் வெளியே வந்துடும்ன்னு நினைச்சு.. அவளையும் சகதிக்குளத்துக்கு தாரை வார்த்தோம்...''

''சரி.. சிவசைலம்.. என்ன ஆனார்? நிஜமாவே சாமியாரா போயிட்டாரா? இல்லை அவரையும் தீர்த்து கட்டிட்டீங் களா?''

''சிவசைலத்தை ராஜனே நிலவறைக்குள்ளே வெச்சு தீர்த்துக் கட்டியிருக்கலாம்ன்னு பண்ணையாள் கிட்டான் என்கிட்டே சொன்னான். கிட்டான் சொன்னது உண்மையாக இருக்கலாம். ஏன்னா.. அந்த வீட்டைக் கண்காணிக்கிற வேலையை அவன் கிட்டே ஒப்படைச்சிருந்தேன்....''

விவேக் எழுந்தான். ''இப்போதைக்கு இது போதும் துரை யரசன். சின்னச் சின்னதா மனசுக்குள்ளே இன்னும் நாலைஞ்சு சந்தேகம் இருக்கு. அதை ஸ்டேஷனுக்குப்போய் விவரமாப் பேசிக்கலாம். புனிதா இந்நேரம் உனக்காக ஸ்டேஷன் லாக் கப்புல காத்திட்டிருப்பா...''

துரையரசன் மெல்ல நடந்து போய் - ஹாஸ்டல் வாசலில் இருந்த ஜீப்புக்குள் ஏற - கோகுல்நாத் விவேக்கிடம் சொன்னார்.

''ஆள் அசத்தலான உயரம்.. ஆப்பிள் நிறம்.. அதான் 'ஹாரீஸ்' வேஷம் அமோகமா எடுபட்டிருக்கு...''



# 24



மறுபடியும் மதுரை.

தமிழ்நாடு ஹோட்டலில் விவேக்கின் அறை. ரூபலா சூட்கேஸில் சேலைகளை மடித்து வைத்துக் கொண்டிருக்க - விவேக்கிடம் அந்த இரண்டு இளைஞர்களும் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

''ஸார்! எங்கள் மதுரைக்கு வந்து ஒரு சிக்கலான கேஸை வெற்றிகரமா முடிச்சு கொடுத்ததுக்காக - இன்னிக்கு சாயந்தரம் ஹோட்டல் பிரஸ்டீஜில் உங்களுக்கு ஒரு பாராட்டு விழா ஏற்பாடு பண்ணியிருக்கோம். அந்த விழாவில் அவசியம் நீங்க கலந்துக்கணும்...''

விவேக் கையெடுத்துக் கும்பிட்டான்.

''அய்யோடா! எனக்குப் பாராட்டு விழாவே வேண்டாம் சாமி. பாராட்டு விழா முடிஞ்சதும் ஹோட்டலுக்கு வருவேன். உடனே உங்க ஊரு டி.எஸ்.பி. எனக்கு போன் பண்ணி, 'விவேக்! தானப்ப முதலி தெருவுல ஒரு கொலை. ஒரு கை, ஒரு கால் மட்டும் ஸ்பாட்டுல இருக்கு. வர்றீங்களா'ன்னு கூப்பிடுவார்.. நான் அந்தக் கேஸையும் அட்டெண்ட் பண்ணி ஊர் பூராவும் லோ.. லோன்னு அலைஞ்சு.. எம் பொண்டாட்டியோட சாபத்தை வாங்கிக்க நான் தயாராயில்லை.. வெளியே கார் நிக்குது... பிரதர்.. ஹோட்டல் பில்லை செட்டில் பண்ணியாச்சு.. இன்னிக்கே தேக்கடி போய் அங்கே ஹால்ட். போலீஸ் வாசனையே இல்லாமே மூணு நாள் தங்கல். அப்புறம் மூணாறு எஸ்டேட்ல எங்களுக்கு தெரிந்தவரோட சொந்தமான கெஸ்ட் ஹவுஸ்ல ரெண்டு நாள் உட்கார்ந்து தேயிலைக் காத்தை சுவாசிக்கப் போறோம்.''



